

# பைஜுல் ஹபீப்



ஆசிரியர் :
காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ்
சிஷ்தி, காதிரி, நக்ஷபந்தி, ஸுஹ்ரவர்தி
என்று அழைக்கப்படும்
H. அப்துர் ரஊப் சாஹிப்
சிதம்பரம்.

## பைஜுல்
## ஹபீப்

தென் நாட்டின் பல பகுதிகளிலும் ஏராளமான முரீதுகளைப் பெற்றுள்ளவர்களும், உர்து, பார்ஸி, ஆங்கிலம், தமிழ் முதலிய பாஷா ஞானமுடையவர்களுமான இந்நூலாசிரியர் ஆத்ம ஞானத்தின் பல்வேறு அம்சங்களையும் யாவரும் படித்து விளங்கிக் கொள்ளும் முறையில் விளக்கி எழுதியுள்ளார்கள். அத்துடன் முக்கியமான உள்ளமுருக்கும் ஸலவாத் ஒன்றும், துஆ ஒன்றும், நபிபெருமான் (ஸல்) அவர்களின் குணாதிசயங்கள் பற்றிய விபரங்களும் இணைக்கப்பட்டுள்ளன. இதைப் படிக்கும் அன்பர்கள் உணர்ந்து தெளிந்து பக்குவிகளாக அல்லாஹ் அருள்வானாக!

ஹதியா ரூ-2



كَأَنَّهَا كَوْكَبٌ دُرِّيٌّ يُوقَدُ مِنْ شَجَرَةٍ مُّبَارَكَةٍ زَيْتُونَةٍ لَّا شَرْقِيَّةٍ وَلَا غَرْبِيَّةٍ

"அந்தக் (கல்ப் என்னும் அகக்) கண்ணாடி ஒரு முத்தைப் போல் ஜொலிக்கும் நட்சத்திரமாய் இருக்கிறது. (அத்தீபம்) ஒரு முபாரக்கான ஜைத்தூன் என்னும் விருக்ஷத்தைக் கொண்டு ஜொலிக்கிறது. (அவ்விருக்ஷம்) மேற்கைச் சேர்ந்ததோ கிழக்கைச் சேர்ந்ததோ அல்ல. (அதாவது, திக்குத் திசையற்ற ஆலம் மிதால் என்னும் சூக்கும உலகத்தில் உள்ளதாய் இருக்கும்)."

وَاعْلَمُوا أَنَّ فِيكُمْ رَسُولَ اللَّهِ

"உங்களிலே அல்லா(ஹ்)வின் ரசூல் நிலைத்திருக்கிறார் என்பதை (திட்டமாக) உணருங்கள்."

# பைஜுல் ஹபீப்

[உர்துவிலிருந்து தர்ஜுமாச் செய்யப்பட்டது]

ஆசிரியர்:

காஜா ஹபீபுல்லாஹ் ஷாஹ்

சிஷ்தி, காதிரி, நக்ஷபந்தி, ஸுஹ்ரவர்தி

என்று அழைக்கப்படும்

முர்ஷித்- H. அப்துர் ரவூப் சாஹிப்

சிதம்பரம்.

## சமர்ப்பணம்

---

இந்த மெஞ்ஞானக் கிரந்தமாகிய "பைஜுல் ஹபீப்" என்னும் நூலை எமது ஆத்மத் தந்தையாகிய குருமகான், ஹஜரத் குத்பே இர்ஷாத் காஜா ஆரிபுல்லாஹ் ஷாஹ் சிஷ்தி, காதிரி, நக்ஷ்பந்தி, ஸுஹ்ரவர்தி கத்தஸல்லாஹு சிர்ரஹு அவர்களின் ஆத்மாவுக்குத் தாழ்மையுடன் சமர்ப்பிக் கிறேன்.

—ஹபீபுல்லாஹ் ஷாஹ்

## பதிப்புரை

'பைஜுல் ஹபீப்' (அன்பனின் ஞானப் பொக்கிஷம்) என்னும் இந்த உன்னதமான நூலைத் தமிழில் வெளியிட உதவிபுரிந்த எல்லாம் வல்ல ரப்பில் ஆலமீனுக்கே சகல புகழும் உரித்தாகுக!

தமிழ் அறிந்த முரீதுகள் பலர் எங்கள் கண்ணியமிக்க முர்ஷித் ஹஜ்ரத் கிப்லா அவர்களிடம் 'பைஜுல் ஹபீ'பைத் தமிழாக்கி வெளியிடவேண்டும் என்று வற்புறுத்தி வந்ததற்கிணங்க அவர்கள் அதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தார்கள். இந்நூல் அச்சாவதற்கான வசதிகளைத் தேடித்தந்து, இது அச்சாகும்காலையில் தாங்களே நேரில் சென்னை வந்து இதன் அச்சு வேலையைக் கவனித்து உதவினார்கள். இந்தக் காமில் குருவை ஆசானாக அடையப் பெற்ற பாக்கியசாலிகளான நாங்கள் அதற்காக அல்லாஹ்வுக்கு நன்றி தெரிவித்தவர்களாய் இருக்கிறோம். எங்கள் சற்குணக் குருநாதர் அவர்கள் நீடூழி காலம் ஜீவித்திருந்து சமூகத்துக்குச் சேவை செய்யக் கிருபை புரியுமாறு ஹக்கு ஸுப்ஹானஹூ தஆலாவிடம் இறைஞ்சுகிறோம்.

இந்நூலை அழகிய முறையில் தர்ஜுமாச் செய்து தந்த சென்னை ஜனாப் ஏ. ஜி. முகம்மது கௌஸ் சாகிபுக்கும், 'நபிபெருமானின் குணாதிசயங்கள்' என்ற தலைப்பிலுள்ள விஷயங்களையும், கடைசியிலுள்ள ஸலவாத்து, துஆ ஆகிய இரண்டையும் தர்ஜுமாச் செய்து தந்த கோட்டைக்குப்பம் ஜனாப் மௌலவி கே. பி. முஹம்மது யாகூப் பாக்கவி அவர்களுக்கும்; இந்நூலின் நடையை ஒழுங்குபடுத்தி, இது அச்சாவதில் ஒத்துழைத்தவரும், "கௌதுல் அஃலம்", "குத்புல் ஹிந்த்", "ரிபாயி ஆண்டகை", "எம்பெருமான் பேசுகிறார்கள்", "மிஷ்காத்துல் அன்வார்" முதலிய பல ஞான ஒளிக் கிரந்தங்கள் எழுதி

வெளிப்படுத்தி மனித சமுதாயச் சேவை செய்துவரும் அன்புள்ள ஜனாப் ஆர். பி. எம். கனி சாஹிப் B. A., B. L., அட்வகேட் அவர்களுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

இதை யாவரும் வாங்கி ஆதரிப்பதுடன், தஸவ்வுப் சம்பந்தமான மற்றும் பல அரிய நூற்களை எமது குருநாதர் அவர்கள் எழுதித்தர ஊக்கமூட்டவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறும்.

G. முஹம்மத் பாத்ஷா

—ஹஜ்ரத் அவர்களின் முரீதுகள் சார்பாக-

# முன்னுரை

அல்லாஹ்வை அடையும் ஆத்ம ஞானப் பாதையை நாடும் அன்பர்களுக்கு உதவுவதற்காக, முன்னோர்களின் அரிய நூற்கள் பலவற்றிலிருந்து விஷயங்களைத் தெள்ளி யெடுத்து எளிய நடையில் இச்சிறு நூலை நாம் எழுதி யுள்ளோம். இதைக் கொண்டு அவர்களுக்குக் காமிலான முர்ஷித் (ஞானகுரு) மூலம் அகமியத் தெளிவு உண்டா வதாக!

அறிவு தெளிந்தது முதலே முஸ்லிமானவன் கலிமா, தொழுகை, நோன்பு, ஜக்காத்து, ஹஜ்ஜு ஆகிய இஸ்லாத் தின் ஐந்து கடமைகளையும் அனுஷ்டானத்தில் கொண்டு வருவது அவன்மீது கடமையாகும். அஃதேபோல் ஹக்குத் தஆலாவின் அகமியத்தை அறிவதும் அவன்மீது கடமையாகும். மனிதன் அறிவு விளக்கமற்றவனாகப் பிறக் கிறான். ஆனால், கற்பிக்கப்படுவது கொண்டு கற்றுக்கொள் கிறான்; அறிவிக்கப்படுவது கொண்டு அறிந்துகொள்கி றான். இவ்விதமே அல்லாஹ்வின் அகமியத்தை அறிவிப் பதுகொண்டு அவன் அறிந்து விளக்கம் பெற முடியும்.

நம்மிடம் ஞான உபதேசம் பெற்றுவரும் முரீது களுக்கு இர்பானுடைய விஷயங்களைப் போதித்துவருங் காலையில், அவர்களில் சிலர் தாங்கள் செவியுறும் விஷ யங்களை மறந்துவிடுவதும், எழுதிக்கொண்ட குறிப்புக் களைத் தவறவிட்டுவிடுவதுமாக ஏற்பட்டுவந்ததால், அது சம்பந்தமான விஷயங்களை ஒரு கோவையாகப் புத்தக வடிவாக எழுதி அச்சிட்டுத் தரும்படி கேட்டுவந்தார் கள். அவர்களுக்காகவும், மற்றும் ஞான வழியில் நடக்க விருப்பங்கொண்டுள்ள அன்பர்கள் கடைத்தேறி ஸலா மத்தின் துறையை அடைய உதவுவதாகவும் "பைஜுல் ஹபீப்" எனும் இச்சிறிய நூலை நாம் உர்துவில் எழுதி னோம். அது கொண்டு பலரும் பயனடைந்துவருகிறார்கள்

தமிழைத் தாய் பாஷையாகக் கொண்ட நமது முரீதுகள் பலரும் இந்நூலைத் தமிழிலாக்கித் தரவேண்டும்

என்று கேட்டுவந்தனர். எனவே, சென்னை முத்தியாலுப் பேட்டை ஜனுப் ஏ. ஜி. முகம்மது கௌஸ் சாஹிப் அவர்களைக் கொண்டு இதைத் தமிழாக்கினோம். தமிழில் எழுதுவதற்குச் சற்று கடினமான ஒரு விஷயத்தைத் திறம்பட நல்ல முறையில் தர்ஜுமாச் செய்த அவர்களுக்கும், 'நபிபெருமானின் குணாதிசயங்கள்', 'சலவாத்த இப்ன பஷீஷ்', 'துஆ' ஆகியவற்றை சிறந்த எளிய நடையில் தர்ஜுமாச் செய்த கோட்டைக்குப்பம் ஜனுப் மௌலவி கே. பி. முஹம்மது யாகூப் பாக்கவி அவர்களுக்கும், அந்தத் தர்ஜுமாக்களின் தமிழ் வாசகத்தைச் சரி பார்த்து ஒழுங்குபடுத்திய ஜனுப் ஆர். பி. எம். கனி சாஹிப் பி. ஏ. பி. எல். அவர்களுக்கும் நமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலே நாம் கூறியது போல முரீதுகளுக்கு விளக்கம் தரவேண்டும் என்பதற்காகவே இதை எழுதியுள்ளோம்; யாருக்கும் மறுப்புத் தருவதோ, யாரையும் கண்டிப்பதோ நமது நோக்கமல்ல என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறோம். இந்நூலைப் படிக்கும் அன்பர்கள் எங்கேனும் ஐயம் எழுந்தால் அதைத் தங்கள் விருப்பப்படி அர்த்தப்படுத்திக் கொள்ளாது விஷயம் அறிந்த பெரியார்களிடம் கேட்டு விளங்கிக் கொள்வது அவசியம். அதுபோல் இந்நூலைப் படிக்கும் ஞானத் தெளிவு பெற்ற மகான்களின் பார்வையில் இதில் எங்கேனும் குற்றங் குறைகள் காணப்படுமாகில் அவர்கள் தம் கிருபைக்கண் கொண்டு அந்தத் தவறுகளைத் திருத்தி வாசித்து இவ்வேழையின் பேரில் தயை கூர்ந்து துஆச் செய்தவர்களாக நமக்கு அறிவித்துத் தருவார்களாயின் நாம் அவர்களுக்கு நன்றி யுடையவர்களாய் இருப்போம். அல்லாஹ் போதுமானவன்.

H. அப்துர் ரவூப்
என்ற ஹபீபுல்லாஹ் ஷாஹ்
சிஷ்தி, காதிரி, நக்ஷபந்தி, ஸுஹ்ரவர்தி,
சிதம்பரம்.

## பொருளடக்கம்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா நிர்ரஹீம்

نَحْمَدُهٗ وَنُصَلِّيْ عَلٰى رَسُوْلِهِ الْكَرِيْمِ

நாம் அவனை (அல்லாஹ்வை)த் துதிக்கிறோம்; மேலும், அவனுடைய சங்கை பொருந்திய திருத்தூதர் மீது ஸலவாத்து (சோபனம்) சொல்கிறோம்.

ஒரு முஸ்லிம் காமிலான ஒரு ஷைகிடம் [1]முரீதாகாமலே ஷரீஅத்தின் ஏவல் விலக்கல்களைக் கட்டுப்பாட்டுடன் ஏற்று அனுஷ்டானம் புரிந்துவருவதனுல் அவன் ஈடேற்றம் அடைந்துவிடமுடியுமாயினும், அவன்மீது அல்லாஹ்வின் [2]தஜல்லியாத்துக்கள் வெளியாகவும், ஆத்மானந்தப் பூரணப் பதவிகளை அவன் அடையவும், "இர்பானே இலாஹீ" என்னும் மெஞ்ஞான நிலையை எத்திக்கொள்ளவும் ஒரு காமிலான ஞான் குருவின் வழிகாட்டுதல் அவனுக்கு அவசியமானதாகவே இருக்கிறது. படிப்பின் மூலம் ஷரீஅத்தின் ஞானம் கைகூடிவிடுகிறது; (நல்ல அமல்களைச் செய்யும்) உழைப்பால் ஈடேற்றம் கிட்டிவிடுகிறது. இஃதே போல் கற்றுக்கொள்வதால் ஆத்ம ஞான அறிவும், உழைப்பால் அல்லாஹ்வை முடுகி அதில் கலக்கும் நிலையும் சித்தியாகின்றன.

---

[1] முரீது - ஞானத்துறையில் நடக்கும் நாட்டங்கொண்டு குருவைப் பின்பற்றி வழிபடுதல்.

[2] தஜல்லியாத்துக்கள் - அல்லாஹ்வின் சிபத்துகளென்னும் வருணிப்புகளின் வெளிப்பாடு.

### காமிலான குருவின் அடையாளம்

காமிலான ஞான குரு யார் என்பதற்கு ஒரு சாதாரண அடையாளம் இதுதான்: அவருடைய அருகிலானதும் அல்லா(ஹ்)வைப்பற்றிய நினைவே உண்டாகிக் கொண்டிருக்கும். சாதாரண மானவர்கள் ஷைகை முதன் முதலில் சந்தித்ததுமே அவருடைய ஞானத் தத்துவம் எத்தகையது என்பதைத் தெரிந்துகொள்ள முடியாதுதான். எனவே, ஷைகை முதன்முதலில் சென்று கண்டு கொள்வதற்கு முன்னதாக, அவருடைய முரீது களில் அறிவாளியும், கல்விமானுமாகிய ஒருவரிடம் சென்று அந்தக் குருநாதரைப் பற்றிய விவரங்களை முதலில் தெரிந்துகொள்வது அவசியமாகும். அவர் ஷைகின் ஆத்மஞான அப்பியாச உயர்வுபற்றியும், அவருடைய படித்தரம் பற்றியும், அந்த ஷைகு தன்னுடைய ஷைகுடன் நீண்ட காலம் கலந்திருந்து பயிற்சி யடைந்து [1]கிலாபத்துப் பெற்றவர் என்றும் தெரிவித்தால் அந்த ஷைகின் கையில் [2]பைஅத்துச் செய்து முரீதாகிக்கொள்ள வேண்டியது.

### ஷைகு செய்யிதாக இருக்கவேண்டிய அவசியமில்லை

சியாதத்து (நபிபெருமான் (ஸல்) அவர்களின் வமிசத்தினர்) என்னும் சிறப்பு வேறு; ஞான வழியின் மகிமை வேறு. சிஷ்யர்களின் லக்ஷியம் காமிலான குருவை அடைவதன்றி வமிசத்தாரின் சிறப்

---

[1] கிலாபத்து - சிஷ்யர்களை ஏற்று அவர்களுக்கு ஞானோபதேசம் செய்ய அனுமதி பெறுதல்.

[2] பைஅத்து - வழிபடும் வாக்குறுதி.

பைத் தேடித் திரிவதன்று. "யாதாமொரு ஒலி[1] யாகியவரின் கரத்தைப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங் கள். அவர் உமர் (ரலி) அவர்களின் வமிசத்தினரா யினும் சரியே. (செய்யிதாகிய) அலி (ரலி) அவர் களின் வமிசத்தினராயினும் சரியே" என்று மௌலானா ரூமி (ரஹ்) அருளியுள்ளார்கள்.

## குருதரிசனத்தின் பலன்களும் அதனை யொட்டிய போதனைகளும்

நீங்கள் முரீதானபின் கீழ்க்காணும் போதனைப் படி நடந்து வரவேண்டும்.

1. சதா காலமும் முரீது தன் குருவைத் தரிச னம் செய்துகொண்டே இருக்கவேண்டும். அப்படித் தரிசிப்பதால் முரீதின் அகமியத்துக்கும் குருவின் அகத்துக்கும் தொடர்பு உண்டாகும் ; அதனுல் குரு வின் சிபத்துக்கள் முரீதின் அகத்தில் பிரதிபலித்து முரீதின் அகத்தேயுள்ள மறைவான தீமைகளை விலக்கும். அதிர்ஷ்டவசமாகக் குருவின் சந்நிதி யில் அவருடன் கூடிக் கலந்திருக்கும் வாய்ப்புக் கிடைத்துவிடுமானுல் முரீது தன் குறிக்கோளை விரைவில் எய்த வசதியாய் இருக்கும். முரீது தன் குருநாதருக்கு மரியாதை செய்யும் அளவுக்கேற்ப அவனகத்தே அன்பும் அதிகமாகும். அன்பு வளர வளர முரீதின் நாட்டமும் சம்பூரணமடையும்.

ஷைகைத் தரிசனம் செய்யும் முறையைக் காமி லான சர்க்குருவிடமே கற்றுக்கொள்ளவேண்டும்.

---

[1] ஒலி - மெய்யடியார்களாகிய அல்லா(ஹ்)வின் அன்பர்.

முரீதின் சுய ஆராய்ச்சி இதில் பயன் தராது. சம்பூரணமான சர்க்குரு ஒருவரை அணுகி ஆத்ம ஞானப் பயிற்சியோ அனுபவமோ பெருதவர்கள் சிலர், ஆத்ம ஞானப் பயிற்சி ஷரீஅத்துக்கு விரோதமானது என்று கதைகட்டி வருகின்றனர். மரியாதையற்றவன் எப்பதவியையும் அடையாதவனுய்ப் போவதுடன் ஆண்டவனின் ரஹ்மத் என்னும் கருணையையும் பெறத் தகாதவனுய் ஆகிவிடுகிருன்.

2. சற்குருநாதரான ஒரு ஷைகிடம் பைஅத்துப் பெற்று முரீதானபின் நல்ல குணமுடையவராகவும், ஷைகின் பெயருக்குப் பெருமையுண்டாக்குபவராகவும் நடக்கவேண்டியது முரீதின்மீது கடமையாகும். கடமையான ஐந்து வக்துத் தொழுகையையும் குறைவற நிலைநிறுத்தி அனுஷ்டித்து வருவதுடன், தஹஜ்ஜுத்[1] தொழுகையிலும் ஒரு முரீது பூரணமாக ஈடுபட்டுவரவேண்டும். தஹஜ்ஜுத் முதல் சுபுஹு வரையில் ஷைகு போதனை செய்த தவக் கிரியைகளை (திக்று அனுஷ்டானங்களை)க் கடைப் பிடித்து வரவேண்டும். அப்படிக் கடைப்பிடிப்பதுடன் அமர்ந்தபடியே முராகபாவில் (இதன் விவரம் பின் வரும்) தூக்கம் மேலிட்டுச் சயனித்தாலும் அதிக நலமாகும். இந்தச் சயனமும் தவத்தில் சேர்ந்தது தான். இன்னும் மற்றச் சமயங்களிலும் (எந்நேரமும்) (அதே திக்று) தியானத்தில் இருக்கவேண்டியது முக்கியம். ஏனென்ருல், மனிதன் வெளியிடும் சுவா

---

[1] தஹஜ்ஜுத்—இரவில் சற்று உறங்கிப் பாதி இரவுக்குப்பின் துயிலெழுந்து தொழும் தொழுகை.

சம் ஒவ்வொன்றும் அவனுடைய வாழ்நாளின் முடி வைக் கணிப்பதாய் இருக்கும். அதே மூச்சில் அவன் வாழ்நாள் முடிந்து மௌத்து (மரணம்) நேரிடவும் கூடும். அப்படியாயின் அவன் அல்லாஹ்வைத் தியானித்தவனாக இறப்பதல்லவா பெரும் பாக்கியம்! இவ்வித அனுஷ்டானத்தில் சந் தேகம் ஏதேனும் உண்டானால், அதைத் தன் குரு விடம் தெரிவித்து சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளவேண்டும். முஜாகிதா (போர்புரிதல்) [2] செய்வதும், ரியாலத்து (அப்பியாசம்) செய்வதும் முரீதின் முடிவான இலக்கல்ல. எனினும், அவற் றின் உதவியுடன் கல்பை (அகத்தை) கார்மானம் பெறச் செய்து சம்பூரணமாக்குவதுதான் முடிவான லக்ஷியமாகும். மேலும், அவைகளின் இச்சையின் புரம் கல்பை இழுத்துச் செல்லவிடாமல் தன்னை விட்டும் விலக்குவதே நாட்டம் (முராதத்) ஆக இருக்கும். விரோதிகளை (இயன்ற மட்டிலும்) பல ஹீனப்படுத்தி அடக்கித் தன் நாட்டத்தை எய்த முடியுமாயின் அதுவே வெற்றியாய் இருக்கும். இல்லையேல் இன்னும் லக்ஷியசித்தி அடையவில்லை என்றுதான் அர்த்தம்.

3. ஷைகின் முன்னர் தன் உள்ளமை ஒன்று மில்லை என்ற அளவுக்கு வந்துவிடவேண்டும். தன் உடல், பொருள், ஆவியால் ஷைகுக்குப் பணியாற்ற

---

[2] போர்புரிதல்—தன் நப்சின் இச்சைகளுக்கு மாறுதல் செய்வது. அதாவது, ஹக்குடைய காட்சிக்குத் திரை யாக நிற்கும், வெளித் தோன்றும் வஸ்துக்களை விலக்கு வதில் நப்சுடன் போர்புரிவது.

வேண்டும். ஷைகு தன் சீடர்களிடை நபியைப் போலாய் இருக்கும்.

حديث - اَلشَّيْخُ فِيْ قَوْمِهٖ كَالنَّبِيِّ فِيْ اُمَّتِهٖ

சமுதாயத்திற்குள் அதன் குருவானவர், மக்களுக்குள் நபியைப் போலாயிருக்கும். (ஹதீது)

அவரிடமிருந்து மறுமையின் தேவையைத் தேடவேண்டும். இம்மையின் பலா பலன்கள் எதையும் அவரிடமிருந்து நாடவேண்டாம். அவர் முரீதின் முன்னர் இருப்பதையும் இல்லாமலிருப்பதையும் சமமாகப் பாவித்துஅவருக்குரிய மரியாதையைத் தந்துவரவேண்டும்.

4. முரீதானவர் தமது வெளிரங்கத்தை ஷரீஅத்தின் சட்டதிட்டங்களைக் கொண்டும், அந்தரங்கத்தை தரீக்கத்தைக் கொண்டும் அழகாக்கிக்கொள்ள வேண்டும். புறம்பேசுவதை விட்டும் விகற்பங்களை விட்டும் விலகிக்கொள்வது அவசியமாகும்.

ஷரீஅத்துக்கு மாறுபாடாக நடக்கும் குருமார்களோடும், மோட்சானந்த சுகபோகத்தில் மூழ்கி இருக்கும் மஜ்தூபுகளோடும், ஆண்டவன் வழியில் நிலைபெற்றிருக்கும் ஒலிமார்களைப் பரிகசிப்பவர்களோடும் முரீது சேராமல் விலகியிருக்க வேண்டும்.

6. தினந்தோறும் அல்லது வாரம் இரு முறை முரீதீன்களான சிஷ்ய சகோதரர்கள் ஒன்றுகூடித் தம் குருவின் ஷஜ்ராவை ஓதி அதன் தவாபை ஷஜ்ராவில் குறிப்பிட்டுள்ள ஷைகுமார்களின் ஆத்மாவுக்கு எத்திவைக்கவேண்டும். அதைக் கொண்டு

முரீதுகளுக்கு ஆத்ம விகாசிதம் அதிகரிக்கும். அத னல் 'அன்வாரே ஸர்மதி' எனப்படும் பரஞ்சோதி ஒளிக்கதிர்கள் இடைவிடாது அவர்கள் இதயங்க ளில் இறங்கிக் கொண்டிருக்கும்.

7. சுலூக் என்னும் தவக் கிரியைகளுக்கு ஒன் பது ஷர்த்துகளுண்டு. அவற்றுள் நான்கு வெளிரங் கம் சம்பந்தப்பட்டவை; ஐந்து அந்தரங்கம் சம்பந் தப்பட்டவை. அவை வருமாறு :

மிதமாய் உண்ணல் - மிதமாய்ப் பேசல் - மித மாய் உறங்குதல் - பொதுஜனங்களுடன் அதிகமும் கலவாதிருத்தல் ஆகிய நான்கும் வெளிரங்கத் தோடு தொடர்புள்ளவை.

உண்மை - அல்லா(ஹ்)விடமே முழுப் பொறுப் பையும் ஒப்படைத்தல் - திட்டம் - பொறுமை-உறுதி ஆகிய ஐந்தும் அந்தரங்கத்தோடு தொடர்புள் ளவை. இந்த ஐந்துக்கும் விபரமாவது :

**சத்தியம் (சித்கு)**

சத்தியம் என்பது அனைத்தையும் படைத்த அல்லா(ஹ்)விடமும், அண்ட சராசரங்களாகிய சிருஷ்டிகளிடமும் உண்மையாய் நடந்துகொள்வது (சகலவற்றிலும் சத்தியவந்தனய் இருப்பது).

**அல்லா(ஹ்)விடமே பொறுப்புகளை ஒப்படைத்தல் (தவக்கல்)**

சகல நிலைமைகளிலும் அல்லா(ஹ்)வின்மீது நம்பிக்கை வைத்துப் பொறுப்பை அவனிடமே விட்டுவைப்பது.

திட்டம் (எக்கீன்)

திட்டம் என்பது நன்மையும் தீமையும் அல்லா(ஹ்)வின் புறத்தாலேயே உண்டாகுபவை என்பதை உள்ளத்தில் சந்தேகமின்றி திட்டப்படுத்திக்கொள்வது. எல்லாம் அவன் செயல் என்று உறுதிகொள்வதாகும்.

பொறுமை (ஸப்று)

இரகசிய பராசியமாகிய சகலவிதக் கஷ்டங்களையும் மனப்பொருத்தத்துடன் சகித்திருப்பது. ஏனெனில், பொதுஜனங்களுக்கு ஆத்மார்த்த அந்தரங்கங்கள் சுலபமாக விளங்கிவிடாது. ஆனதால், அவர்கள் சதாவும் அக நாட்டமுடையவர்களுக்கு மாறுபட்டவர்களாகவே இருக்கிறார்கள். இதனால், அவர்களில் பலர் ஞான அறிவு பெற்ற ஆரிபீன்களாகிய சாதுக்களுக்கு ஊறு செய்கிறார்கள். ஞானிகளாகிய அவர்கள் யார் என்பதும், அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதும் இந்த ஜனங்களுக்குத் தெரிவதில்லை.

உறுதி (அதுமு)

எண்ணங்களையும் நாட்டங்களையும் கொண்ட சுலூக் என்னும் இப்பாதையிலே உயிரிழக்க வேண்டியதிருக்கும் என்ற நிலைமை உண்டானாலும் வழி பிசகாத திடச்சித்தம் அவசியமானதாகும். இதுதான் ஞானிகளின் ஒருமைப் பிடியாய் இருக்கும். இந்த உறுதியால்தான் மகான்களெல்லாம் சித்திபெற்று ஜெயமடைந்தார்கள். இவ்விதப் பாக்கியங்களை அடையப்பெற நம்பெருமான் ரஸூலே கரீம் முஸ்தபா (ஸல்) அவர்களின் திரு அருள் இன்றியமையாததாகும்.

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்.

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ۝ وَالْعَاقِبَةُ لِلْمُتَّقِيْنَ ۝
وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِهِ الْكَرِيْمِ ۝
مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ ۝

இஸ்லாம் ஓர் ஆத்மீக ஞானத்தின் பெயராகும். அது கலிமா தையிபாவின் உட்பொருள் விளங்கி அதன்படி நடைமுறையில் அனுஷ்டிப்பதால் சித்தியாகும். இதற்கு (அஸ்ஸிராத்துல் முஸ்தகீம்) "நிலைபாடான நேரிய பாதை" என்றும் பெயர் சொல்லப்படுகிறது. இப்பாதையில் செல்லும் மனிதன் தன்னைச் சிருஷ்டித்த ஆண்டவனின் முடுகு தலை எத்திக்கொள்ளுகிருன். இதன் (இஸ்லாமின்) லக்ஷியம் ஹக்கை அறிதல் என்னும் அல்லா(ஹ்) வின் மஃரிபத்தாகும். இந்த லக்ஷியத்தைப் பெறுவதற்காகவே மானிடன் சிருஷ்டிக்கப்பட்டுள்ளான். இதற்கான பாதைதான் தரீகத் அல்லது சுலூக் என்று சொல்லப்படுகிறது.

**ரசூல் (ஸல்) அவர்களின் முன்மாதிரி**

சங்கை பொருந்திய ஔலியாக்களும், சிறப்பு மிக்க சூபியாக்களும் (ஞானவான்களும்) இந்தப் பாதையில் நடந்தே விலாயத் என்னும் பதவியை பெற்றுக்கொள்ளுகிறார்கள். அவர்களிலிருந்து நாயகம் (ஸல்) அவர்களின் இந்த அனந்தரம் ஹிருதய வாயிலாக அருளப்படுகிறது. நாயகம் (ஸல்) அவர்கள் மனிதர்களுக்குத் தங்கம், இரத்தினம் முதலிய அனந்தரங்களை விட்டுச் செல்லவில்லை. ஆனால், அல்லாஹுத்த ஆலாவை அறியும் ஆற்றலும், அவனது அன்பும் கொழுந்து விட்டெரியும் சுடரா கிய இஷ்க் என்னும் பேரன்பும்தாம் எம்பிரான் (ஸல்) மனிதர்களுக்கு நன்கொடையளித்த ஆஸ்தி யாகும். இந்த ஆஸ்தி இஷ்குல்லாஹ் என்னும் பேரன்பின் சுடரில் எரிந்து கரிந்த இருதயங்களுக் கும், அதிலே சொக்கிக் கிடப்பவர்களுக்குமே அளிக் கப்படுகிறது.

"லாஇலாஹ இல்லல்லாஹு" என்னும் கலி மாவை (நாவளவில்) உச்சரிப்பது வேறு, அதனை (அதன் அந்தரங்கக் கருத்தை யதார்த்தமானபடி) அறிவது வேறு, அது தானாகவே ஆகிவிடுவது வேறு என்பதை உணர்வீர்களாக! நாயகம் (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்: "ஈமானின் தாழ்ந்த பதவி உலகத்தை (உலக ஆசாபாசங்களை) வெறுப்பதாகும்; அதன் மேலான பதவி 'லாஇலாஹ இல்லல்லாஹு' வென்று விண்ணப் பம் செய்வதாகும்." நாயகம் (ஸல்) அவர்கள் இந்த லாஇலாஹ இல்லல்லாஹு வென்னும்

இஸ்லாமிய அத்வைத மூலமொழியை ஜனங்கள் ஒப்புக்கொள்ளுவான் வேண்டி இவ்விதம் திருவுள மானுர்கள். ஏனெனில், கலிமாவை ஒப்புக்கொண்டு விண்ணப்பஞ் செய்தவுடனேயே ஜனங்களின் உயிரும் பொருளும் கார்மானம் பெற்றுவிடுகின்றன என்று ஹஜரத் ஐனுல் குலாத் ஹமதானி (ரஹ்) அவர்கள் சொல்கிருர்கள்.

. அன்பனே, உலக பந்த பாசத்தில் சிக்குண்டு கிடந்த வண்ணமே நாவால் கலிமாவை விண்ணப்பம் செய்பவன் தன் ஆவி பொருள் இவைகளைக் காத்துக்கொள்ளலாமேயன்றி, வேறு எவ்வித நற்பயனையும் அடைந்துவிட முடியாது. நண்பனே, பொய்யுரைப்பது ஹராமல்லவா ! எனவே, கலிமாவைக் கல்பின் சம்பந்தமின்றி நாவால் மட்டும் சொல்வது திட்டமாகப் பொய்தானே! இது ஹராமல்லவா ! ஆனுல், கலிமாவை உரைத்தாலன்றி ஆவி பொருளின் கார்மானம் கிடைக்காது. ஆதலால், ஷரீஅத்திலே நாவால் மட்டும் கலிமாச் சொல்லுவது அனுமதிக்கப்பட்டுள்ளது. இதைக் கொண்டு குறுகிய நோக்கமுடையோர் சிலர் நாவால் கலிமாவை விண்ணப்பம் செய்துகொண்டே காரியம் பூர்த்தியாகிவிட்டது என்று எண்ணிக் கொள்கின்றனர். கைசேதமே ! அவ்விதம் சொல்லுவதில் கலிமாவின் எழுத்தை மட்டும்தான் நீ உச்சரிக்கிருய், அல்லது கேட்கிருய். ஹஜ்ரத் பாயெஜீது பிஸ்தாமீ (ரஹ்) அவ்விதம் நாவளவில் உச்சரிக்கும் கலிமாவை விட்டும் தௌபாச் செய்தவர்களாகச் சொல்கிருர்கள் :

تَوْبَةُ النَّاسِ مِنْ ذُنُوْبِهِمْ وَتَوْبَتِيْ مِنْ
قَوْلِ لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ

"மனிதர்கள் தங்களின் பாவங்களை விட்டும் தௌபாச் செய்கிறார்கள் ; நான் லாஇலாஹ இல்லல்லாஹு (என்று நாவால் மட்டும்) சொல்வதை விட்டும் தௌபாச் செய்கிறேன்" என்று.

இவ்வண்ணம் அவர்கள் தௌபாச் செய்வதன் காரணம் இன்னதென்று உனக்குத் தெளிவாகவில்லையா!

மூமினுடைய நாவும் கல்பும் ஒன்றாய் இருக்கும்

நாயகம் (ஸல்) அவர்கள் திருவுளமாய் இருக்கிறார்கள் :

اَفْضَلُ مَاقُلْتُهُ اَنَا وَالنَّبِيُّوْنَ مِنْ قَبْلِيْ
لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ

"நானும் எனக்கு முன்னுள்ள நபிமார்களும் உச்சரித்ததில் "லாஇலாஹ இல்லல்லாஹு" (என்பது) மேன்மை பொருந்தியதாய் இருக்கும்"

என்று. இதைக் கொண்டு அன்பியாக்களும், ஒளலியாக்களும் கலிமாவை விண்ணப்பம் செய்தது நாவினால் மட்டும் என்று நீ சொல்ல முடியுமா? கல்பினால் உரைக்கவில்லை என்று எண்ணுகிறாயா ? அப்படி

யன்று. மூமினுடைய கல்பும் நாவும் ஒன்ருய் இருப்ப தால், கல்பை விட்டும் நாவு பிரிந்து பேசக்கூடாது. உண்மையிலே அவர்களின் நாவால் உச்சரிக்கப்படு வது கல்பின் உச்சரிப்புத்தான். ஆகையால், அன்பியாக்களும் ஔலியாக்களும் லாஇலாஹ இல்லல்லாஹு வென்று விண்ணப்பம் செய்வதும், அதை விளங்கிக்கொள்வதும், அதுவாய் ஆகி விடுவதும் நம் உச்சரிப்பு, விளக்கம், நிலைமை இவைகளை விட்டும் வேருனவையாய் இருக்கின் றன.

உண்மையான மூமின்கள்

أُولَٰئِكَ هُمُ الْمُؤْمِنُونَ حَقًّا ۝

" அவர்கள்தான் உண்மையான மூமின்கள் "

நாவும், கல்பும் ஐக்கியப்பட்டு ஒன்ருகிவிடும் பத வியை எத்திக்கொண்டவர்களே உண்மை முஸ்லிம் களாவர். மற்றவர்கள் பெயரளவில்தான் முஸ்லிம் களாய் இருக்கிருர்கள். கருத்தாவது: தான் தெரியாப் பருவத்தில் செய்துள்ள அந்தகார தோஷங்கள் யாவற்றையும் தன் மனக் கண்ணுடியில் நின்றும் கழுவிச் சுத்திசெய்து, பூத சரீரத்தையும் பிரகாசிக்கும் ஒளிவாக்கிக் கொண்டவர்கள்தான் விசுவாசமென் னும் உண்மைப் பதவியை அடைத்த முஸ்லிம் களாவர். ஏனையோர் வெளிரங்கத்தின் தோற்றத்தில் முஸ்லிம்களாய் இருக்கிருர்கள்.

அல்லா(ஹ்)வே, கலிமாவைக் கற்கவும் அதன் உட்பொருளை ஆராய்ந்து விளக்கமுறவும் விசுவாசிகளுக்கு உதிப்புண்டாக்கி உதவி செய்வாயாக! ஆமீன்.

**வெளிப்படை என்ற லாகிரில் உள்ள உலமாக்களும்**

**உட்படை என்ற பாத்தினிலுள்ள சூபியாக்களும்**

வெளிப்படையில் தரிப்பட்டிருப்பவர்களான ஆலிம்களும், அந்தரங்கத்தில் தரிபட்டுள்ளவர்களான சூபியாக்களும் ஒரே பாதையைக் கடைப்பிடித்துச் செல்பவர்கள்தாம். இவ்விரண்டு வகுப்பாருக்கும் உள்ள வித்தியாசம் யாதெனில் ஆலிம்கள் குர்ஆன் ஹதீதின் பொருளை ஷரீஅத்தின் வெளிப்படையான கருத்தின் அளவுக்குப் போதுமாக்கிக் கொள்ளுகிருர்கள். அந்த அளவுக்கே ஜனங்களுக்கு ஏவல் விலக்கல்களைப் போதிக்கிருர்கள். இப்பணியில்அவர்களும் கலப்பறுதலானவர்களாய்ச் சேவை செய்வதால் அல்லாஹுத் தஆலா அவர்களுக்கு நேரான கூலியை அருளுவான் என்பதில் ஐயமில்லை. ஆனல், சூபியாக்கள் (மேற்கூறிய உபதேசங்கள் செய்வதுடன்) திக்று, பிக்ருகளை இடையருது செய்துவருகிருர்கள். மேலும், ஜுஹ்து, தக்வா, முஜாஹிதா முதலிய சுலூக் என்னும் மேம்பாடான அகச் சுத்தி அப்பியாசங்களையும் இவர்கள் அனுஷ்டித்து இல்முல் எக்கீன் என்னும் திட்டமான அறிவின் தானத்தைக் கடந்து ஹக்குல் எக்கீன் என்னும் பூரண மெய்நிலையை எத்திக்கொள்ளுகிருர்கள்; மற்றவர்களையும் அந்நிலைக்கு எத்திவைக்கிருர்கள்.

أَنْ تَعْبُدُ اللّٰهَ كَأَنَّكَ تَرَاهُ

"நீங்கள் அல்லா(ஹ்)வைத் தரிசிப்பவர்களாக அல்லா(ஹ்)வை வணங்குங்கள்" என்ற ஹதீதுக்கு ஏற்ப இவர்கள் தாங்களும் தரிபட்டுச் செயலாற்றி பிறருக்கும் அதே உபதேசத்தை அருளுகிறுர்கள்.

ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் தெரிவித்த ஒரு விருத்தாந்தம் இது :

"ஒரு நாள் ஜிப்ரயீல் (அலைஹி) மனித ரூபத்தில் நபி(ஸல்) அவர்கள் முன்னிலையில் தோற்றமாகி வெகு மரியாதையுடன் மண்டியிட்டமர்ந்து சில விஷயங்கள் குறித்து (விவரம்) கேட்டார்கள். அதற்கு நாயகம் (ஸல்) அவர்கள் விபரங் கூறினுர்கள்.

يَا مُحَمَّدُ أَخْبِرْنِي عَنِ الْإِسْلَامِ

ஜிப்ரயீல் (அலைஹி) : முஹம்மதே, இஸ்லாமைப் பற்றி எனக்கு (விபரம்) அறிவியுங்கள்.

قَالَ الْإِسْلَامُ أَنْ تَشْهَدَ أَنْ لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَنَّ مُحَمَّدًا رَّسُولُ اللّٰهِ وَتُقِيمُ الصَّلٰوةَ وَتُؤْتِيَ الزَّكٰوةَ وَتَصُومُ رَمَضَانَ وَتَحُجَّ الْبَيْتَ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا ۝

முஹம்மது (ஸல்) : இஸ்லாமாவது, " வணக்கத் துக்கு உரியவன் அல்லா(ஹ்)வைத் தவிர யாரு மில்லை; இன்னும், முஹம்மது (ஸல்) அல்லாஹ் வின் ரசூலாயிருக்கும்" என்று நீங்கள் சாட்சி பகர்வதும், தொழுகையைச் சீராக நிலை படுத்தி வைப்பதும் (விடாமல் தொழுது வருவ தும்), ஜக்காத்துக் கொடுப்பதும், ரமலான் மாதத்தில் நோன்பு நோற்பதும், பிரயாண வசதி, செலவு வசதி முதலியன ஏற்பட்டபோது ஹஜ்ஜு யாத்திரை செய்வதுமாகும்.

قَالَ اَخْبِرْنِيْ عَنِ الْاِيْمَانِ

ஜிப் : உண்மை சொன்னீர்கள், அல்லா (ஹ்)வின் ரசூலே! ஈமானைப்பற்றி எனக்கு அறிவியுங்கள்.

قَالَ اَنْ تُؤْمِنَ بِاللّٰهِ وَمَلٰٓئِكَتِهٖ وَكُتُبِهٖ وَ
رُسُلِهٖ وَالْيَوْمِ الْاٰخِرِ وَالْقَدْرِ خَيْرِهٖ وَشَرِّهٖ
مِنَ اللّٰهِ تَعَالٰى وَالْبَعْثِ بَعْدَ الْمَوْتِ ٥

முஹம்மது (ஸல்) : ஈமானாவது அல்லா(ஹ்)வின் மீதும் அவனுடைய மலக்குகள்மீதும், வேதங்க ளின்மீதும், அவனுடைய ரசூல்மார்கள் (திருத் தூதர்கள்) மீதும், கியாம நாளின்மீதும், மேலும்

தக்தீர் (அல்லா(ஹ்)வின் கற்பனையின்) மீதும், மரணத்துக்குப் பின் எழுப்பப்படுவதன் மீதும் ஈமான் கொள்வதாகும்.

قَالَ اَخْبِرْنِيْ عَنِ الْاِحْسَانِ

ஜிப் :—உண்மை சொன்னீர்கள். அல்லாஹ்வின் ரசூலே! இஹ்சானைப்பற்றி எனக்கு அறிவியுங்கள்.

قَالَ اَنْ تَعْبُدَ اللّٰهَ كَاَنَّكَ تَرَاهُ فَاِنْ لَّمْ تَكُنْ تَرَاهُ فَاِنَّهُ يَرَاكَ

முஹம்மது (ஸல்) :—இஹ்சானவது நீங்கள் அல்லா(ஹ்)வை நேரில் பார்ப்பதைப்போல் அவனை வணங்குவது. அவ்விதம் வணங்க இயலாவிடில் அவன் உங்களைப் பார்க்கிருன் (என்று உணர்ந்தவர்களாக) அவனை வணங்குதல்.

ஜிப் :—உண்மை சொன்னீர்கள் அல்லா(ஹ்)வின் ரசூலே!

இந்த ஹதீதைக் கொண்டு ஹக்காயிகுடைய, உலமாக்கள் சொல்கிருர்கள், தீனுவது பிக்று, கலாம் தஸவ்வுப் - இம் மூன்றையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்று. அதாவது, ஹதீதில் விவரித்துள்ள இஸ்லாமின் ஹக்கீகத் பிக்ஹு என்னும் (மார்க்க சட்டங்களை) அடிப்படையாகக்கொண்டது;

ஈமானின் ஹக்கீகத் அகாயிது என்னும் கொள் கையை அடிப்படையாகவுள்ளது; இஹ்சானின் ஹக்கீகத் தஸவ்வுப் என்னும் ஞானத்தை அடிப் படையாகக் கொண்டது. ஞானத் தெளிவின்றி இஹ்சான் என்னும் மர்த்தபாவை அடைந்து நேர் முகமாக ஹதீதில் சொல்லியபடி வணக்கம் புரிவது சாத்தியமாகாது. இது ஷுஹூதுடைய மர்த்தபாவும் முஷாஹிதா உடைய நிலையுமாய் இருக்கும்.

ஹஜரத் இமாம் மாலிக்கி (ரஹ்) சொல்கிறார்கள், "பிக்ஹு தெரிந்துகொள்ளாத ஸூபி ஸிந்திக் (துன்மார்க்கன்) ஆ கி வி ட் ட ா ன். ஞானத் தெளிவு இல்லாத பகீஹ் (பாஸிக்) பாவியாகிவிட் டான். இவ்விரண்டிலும் தேர்ச்சி பெற்றவர் முஹக் கிக் (தெளிவாளர்) ஆகிவிட்டார்" என்று. ஆனதால் பிக்ஹு ஞானத்தைக் கற்றுக்கொண்ட பிறகு, தஸவ்வுப் என்னும் ஞானக் கல்வியையும் பெற்றுக் கொள்ள வேண்டுவது அத்யாவசியமாகும். இன் றேல் புத்தகம் சுமந்த மிருகம் என்னும் பழிச் சொல் லுக்கு ஆளாக நேரும்.

**ஈமான் கொண்டவர்களுக்கு (மறுபடியும்) ஈமான் கொள் ளுங்கள் என்ற கட்டளை எதற்கு ?**

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا آمِنُوا بِاللَّهِ

"ஈமான் கொண்ட ஜனங்களே, அல்லா(ஹ்) வின்மீது ஈமான் கொள்ளுங்கள் !"

என்ற திரு குர்ஆன் ஆயத்தில் விளிக்கப்பட் டுள்ளவர்கள் யார்? ஏற்கனவே ஈமான் கொண்டுள்ள

வர்களை, "ஈமான் கொண்டவர்களே," என விளித்து "ஆமினூ !" (ஈமான் கொள்ளுங்கள்!) என்று கட்டளையிடக் காரணமென்ன? நிகழ் காலச் சந்தர்ப்பங்களை நழுவவிட்டுக் கடந்த காலக் கதைக ளிலும், எதிர்காலக் கனவுகளிலும் மூழ்கிக் கிடைக் கும் வாய்ப்பை இழந்துவிடுவது மனித சுபாவமாய் இருக்கிறது.

**இம்மையில் குருடர் மறுமையிலும் குருடர் என்பதற்கு இலக்கானவர் யார் ?**

مَنْ كَانَ فِيْ هٰذِهٖٓ اَعْمٰى فَهُوَ فِي الْاٰخِرَةِ اَعْمٰى وَاَضَلُّ سَبِيْلًا

"இம்மையில் குருடனாய் உள்ளவன் மறுமையி லும் குருடனாவான்; வழிதவறியவனும் ஆவான்" என்பதற்கு இலக்கானவர் யார்? என்ற விஷயத்தை உணர்வீர்களாக!

**விலாயத்துக்குக் கராமத்துக்கள் அவசியமன்று ;**

**நபித்துவத்துக்கு முஃஜிஸாத் தேவையன்று**

விலாயத் என்னும் ஒலித்தனத்துக்கும், காட்சி கள், காரணங்களுக்கும் யாதொரு சம்பந்தமு மில்லை. நபித்துவம் அபூர்வ நிகழ்ச்சிகளின் (முஃஜி ஸாத்துகளின்) அவசியமற்றதாய் இருப்பது போலவே, ஒலித்தனமும் காரணங்களின் தேவை

யற்றதாய் இருக்கிறது. மனோவசியம், ஜீவவசியம் போன்றவைகளைப் பழகியவர்கள் கூட ஆத்ம சம்பாஷணை முதலிய காரணங்களை நடத்திக் காட்டு கின்றனர். இதனால், அவற்றை நிகழ்த்துபவர்களை மெய்ப்பொருளென்னும் ஹக்கின் குணம் குடி கொண்ட நாதாக்களாகிய ஒலிமார்கள் என்று கொள் வது அறியாமையாகும்.

'ஏ அன்கா வென்றும் பக்ஷியே, வெகு உயரத் தில் இருக்கிறது உன் கூடு' (கவிதை)

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ ۝

"(முஹம்மதே,) உம்முடைய வலுப்பம்பொருந் திய ரட்சகன் அவர்கள் (காபிர்கள்) சொல்பவை களை விட்டும் தூயவன்."

ஒரு கருத்தை அடையப் பல மார்க்கங்கள் (முறைகள்) உண்டு. அஃதே போல் ஹக்கென் னும் மெய்ப்பொருளை எத்திக்கொள்ளும் கருத்தை (இஸ்லாம் மார்க்கப் பழக்கத்தில் இதனை 'தஸவ்வுப்' என்று சொல்லப்படும்) அடைவதற்குப் பல்வேறு முறைகளை அனுஷ்டிக்கவேண்டியதாய் இருக்கிறது. அன்பியாக்கள் என்னும் தீர்க்கதரிசிகள் இதே கருத்தை எடுத்துரைக்கவும், அதனை அடைவதற் குரிய முறைகளை போதிக்கவுமே வந்தார்கள். இம் முறைகளுக்குத்தான் 'ஷரீஅத்து' (மார்க்கம்) என்று பெயர். இனி மார்க்கத்தையே கருத்தெனக் கொள் வது அஞ்ஞானத்தின் முடிவாகும்.

குருவின் வஸீலா

وَابْتَغُوا إِلَيْهِ الْوَسِيْلَةَ

என்னும் திரு குர்ஆன் வாக்கியம், காமில் குரு வின் ஆதரவைப் பற்றிப்பிடித்துக் கொள்ளுங்கள் என்னும் கருத்துக் கொண்டது ; وَجَاهِدُوْا

வ ஜாஹிது என்னும் திருமொழி, பாடுபட்டு நப்ஸு டன் போர் புரிதல் என்னும் கருத்துடை سَبِيْلِهٖ

யது; ஸபீலிஹி என்னும் திருவாக்கு (தன்னிலுள்ள) இலாஹியத்தான (சிர்ரை) மெய்ப்பொருளை தெளிந்த றிவது என்னும் கருத்துடையது.

குருவைப் பின்பற்றுதல்

நப்ஸின் ஆபத்துக்களை விட்டும் நீங்கி வெற்றி பெறுவதற்காகப் பாடுபட்டு போர் புரிவதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருப்பீர்களாக! அதிர்ஷ்ட வசமாய் காமில் குரு கிடைக்கப் பெற்ருல் (தூய்தான அல்லாஹ்வுக்கே புகழ் அடங்கலும் உரியது) அக்குருவின் கையை ஆண்டவனின் கையெனக் கொண்டு உறுதியுடன் பற்றிப்பிடித்துக் குருவின் உத்தரவுக்கு இணங்கி நடப்பதில் அணுவளவும் பிச காதிருப்பீர்களாக! குருடன் தன்னை அழைத்துச் செல்பவன்மீது பரிபூரண நம்பிக்கை வைத்து

அவனுடைய சொல்லுக்கிணங்கி வழி நடப்பது போல் உங்கள் குருவின்மீது பூரண நம்பிக்கை கொண்டு அவரைப் பின்பற்றுவீர்களாக !

### ஹாபிஸ் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களின் உறுதிமொழி

ஹதீதின் பொக்கிஷமாகிய 'ஸஹீஹ் புகாரி' என்னும் அரிய நூலுக்கு உரை எழுதிய பிற்காலப் பெரியார்களில் மதிப்புக்குரியவர்கள் ஹாபிஸ் இப்னு ஹஜர் என்னும் பெரியார் ஆவார்கள். அவர்கள் எத்தகைய உறுதியுடன் இவ்விஷயத்தை உண்மைப்படுத்திக் கூறுகிறார்கள் பாருங்கள் : (சன்மார்க்க முறையின் கோட்பாடுகளிலும், அதன் அனுபவ சாதன முறைகளிலும் முற்றிலும் தேர்ச்சிபெற்ற) "யாதாமொரு காமிலான குருவைத் தன் வழி காட்டியாக ஏற்றுக்கொள்ளல், கபடர்கள் வார்த்தை கேளாமை, ஆசாரப் பழக்கங்களைத் தவிர்த்து குருவின் கட்டளையை ஏற்று நடத்தல்-இவை அனைத்தும் ஆண்டவனின் நாட்டமுடையவர்களுக்கு அத்தியாவசியமானவையாய் இருக்கின்றன. இவ்வித வழிகாட்டி கிடைக்கப் பெற்ற ஒருவன் அவரைவிட்டு விலகுவது அவன் மீது ஹராமாகும். நம்முடைய இவ்வுறுதி மொழிக்குச் சான்றாக குர்ஆன்-ஹதீது-இஜ்மாஃ - கியாஸ் என்னும் நான்கு அதிகாரப் பிரமாணங்களும் சாக்ஷியம் பகர்ந்துள்ளன. மேலும், நான்கு வேதங்களும் இந்தத் தாவாவை நிலைபடுத்துவனவாய் இருக்கின்றன."

சொல்லும் அக நிலையும்

திரு குர்ஆனையும் ஹதீதையும் கொண்டு ஜுஹ்தும்(1), தக்வாவும்(2) இன்னவென்று தெரிந்து கொள்ளும் விஷயம் வேறு; காமில் குருவிடம் நடைமுறையில் பழகிச் செயலாற்றி அதன் சாராம் சத்தைப் பருகிக்கொள்ளும் விஷயம் வேறு. முந்தியது மார்க்கக் கல்வியை-ஏட்டுக் கல்வியை - மட்டும் பொருந்தியது. பிந்தியதோ அக்கல்வியுடன் சாதனை புரிந்து அதன் பயனாக உண்டாகும் ஆத்மீக அனுபவங்களையும் அடைவதாகும்.

இதற்கு அத்தாட்சி வேண்டுமானால் மார்க்கக் கல்வி பயின்ற உலமாக்களைக் கவனித்துப் பாருங்கள் ! அவர்களில் பலர் ஷரீஅத்தின் ஏவல், விலக்கல் சம்பந்தப்பட்ட மார்க்கச் சட்டக் கல்வியில் தேர்ந்தவர்களாய் இருப்பினும் நப்ஸின் கெடுதிகளை விட்டும் சுத்தப்படுத்தப்படாதவர்களாய்க் காணப்படுகிறார்கள். ஏவல் விலக்கலின் ஆகமத்தைப் பிரசாரம் செய்யும் திறமை நன்கமைந்திருந்தும், நப்ஸின் கெடுதிகளான கோபம்- பொறாமை - அகங்காரம்-பேராசை - இச்சை-முகதாட்சிணை - லோபித்தனம் முதலியவைகளை விட்டும் காக்கப்பட்டவர்களாய் இல்லாத உலமாக்கள் பலரை நம்

---

(1) ஜுஹ்து - இவ்வுலகத்தில் உலக வாழ்க்கைக்கு அத்தியாவசியமான (ஷரீஅத்தில் குறிப்பிட்டுள்ள) அளவுக்கு மேம்படாமல் வாழ்க்கைச் சாதனங்களை உபயோகிப்பதுடன் மேல் கொண்ட ஆசாபாசங்களை அடியோடு வெறுத்தல்.

(2) தக்வா-பயபக்தி

அனுபவத்தில் பார்க்கிறோம். இதற்கு மாற்றமாக சொற்பக் கல்வியுடையவர்களில் பலர் காமில் குருவின் கூட்டுறவின் பயனாய் மேல் சொன்ன நப்ஸின் கேடுகளை விட்டும் சுத்தமானவர்களாய் இருப்பதையும் காண்கிறோம். உடலின் வியாதி களுக்கு நிவாரணம் நாடி ஜனங்கள் அக்கரையுடன் வைத்தியர்களிடம் ஓடோடிச் சென்று சிகிச்சை செய்துகொள்கின்றனர்; ஆனால், உடல் நோயை விட ஆயிரம் மடங்கு கொடியதான அக நோயைப் போக்கி வைக்கும் வைத்தியர்களாகிய காமில் குருக்களின் அவசியத்தை அவர்கள் உணரா மலிருப்பதுதான் வியப்புக்குரிய விஷயமாகும்.

**"இஹ்சான்" என்னும் மர்த்தபா (பதவி) குருவின் பராமரிப்பின்றிக் கிடைக்காது**

அந்தரங்க அசுத்தங்களாகிய துர்க்குணங்களை விட்டும் நீங்கித் திரிகரண சுத்தி பெற்று மனநிம்மதி யுடனும், இன்பமுடனும் அல்லாஹ்வைப் பார்ப்பவர் களாய்த் தொழுகையை நிறைவேற்றும் எஹ்சான் என்னும் பதவி காமில் குருவின் பராமரிப்பின்றி கிடைப்பது அரிது என்பதற்கு அனுபவமே சாட்சி யாயுள்ளது. இதனால் குருவிடம் பைஅத்துச் செய்து கொண்ட ஒவ்வொருவரும் உன்னதமான பதவிகளை எத்திக்கொள்ளுகிறார்கள் என்று எண்ணவேண் டாம். பைஅத்துச் செய்துகொண்டவர்களில் ஆயிரக்கணக்கானவர்கள் மேம் பதவிகளென்ன, ஷரீஅத்தின் வரம்புக்குள்ளும் நிலைபடாமல் வீழ்ந்தவர்களாய்க் கிடந்து உழல்வது உண்மை தான். அல்லா(ஹ்)வின் பாதையில் நடக்கும்

ஒழுங்குடன் சாதனை முறையில் நிலைபட்டுப் பயின்று நப்சுடன் போர் புரிவதில் தம் வாழ்க்கை (யின் ஒரு பங்கையாவது)யைச் செலவு செய்பவர்கள் தான் குருவின் நல்லருளைப் பெற்றுக்கொள்ள முடியும். இப்படியின்றி தன் ஆத்ம சுத்திக்கான அனுஷ்டானங்களில் ஈடுபடாது ஷரீஅத்தின் ஏவல் விலக்கலை அனுஷ்டிப்பதாகக் காட்டிவருவது வெளி ஆசாரப் பழக்கமன்றி வேறொன்றுமில்லை. இவ்வெளி ஆசாரப் பழக்கத்துக்கு ஆத்மீகப் பக்குவம் பெற்ற பெரியார்களிடத்தில் மதிப்பில்லை. திரு குர்ஆன்,ஹதீதில் இன்னது இருக்கிறது என்று அறிந்துகொள்ளுவது மட்டும் ஒருவனுடைய சீர்திருத்தத்துக்கும் அல்லா(ஹ்)வின் அருளென்னும் வெற்றியை எய்துவதற்கும் போதுமானதாய் இருக்குமாகில் லாஹிரான உலமாக்கள் அத்தனை பேர்களும் காமிலான ஆரிபுகளாக ஆகி இருப்பார்கள். ஆனால், அப்படியில்லை. ஹஜரத் ரூமி (ரஹ்) சொல்கிறார்கள், " தீனின் விஷயம் ஆகமத்தின் ஆராய்ச்சியை மட்டும் ஒட்டியதானால் பக்ருத்தீன் ராஜி (ரஹ்)யும் தீனின் ரகசியம் தெளிந்தவராய் இருந்திருப்பார் " என்று.

## பூஅலி சீனாவின் போதனை அளிக்கும் ஒரு செய்தி

பூஅலி சீனா(ரஹ்) உலகில் சிறந்த வைத்திய மேதை ; தத்துவ சாஸ்திரத்தில் பெரிய நிபுணர். மாக்கக்கலைகளிலும் தேர்ச்சியுடையவர். ஆனால், அவர் ஆத்ம ஞான அனுஷ்டானத்தின் பக்கம் கவனந்திருப்பவில்லை. அவருடைய மரணத் தருவாயில்அவர் நண்பர்களில் சிலர் அவரிடம் நற்போதனைபுரியுமாறு வேண்டினர். பூஅலி சீனா அழுத

வண்ணமாக, "நண்பர்களே, என் நெஞ்சிலிருந்த கலைகள் அத்தனையும் இத்தருணம் ஒன்றுமில்லா மல் வெளியேறிவிட்டன. இவ்வண்ணம் சம்பவிக்கு மென முன்னமேயே அறிந்திருப்பேனேயாகில் அக்கலைகளை யான் (வீணில்) கற்றிருக்கமாட்டேன். "மன் அரப" (தன்னை அறிதல்) என்னும் ஆத்ம ஞானம் எனக்கில்லை. ஆகையால் பூஅலி பேதை யாகச் செல்கிறான்" என்று கூறி வருந்தினார்.

இதனால் வெளிக் கல்விகளான கலைகளை எவ்வ ளவுதான் கடல் போன்று கற்றாலும் ஆத்ம ஞான மென்னும் கிந்தீல் தீபத்தை ஒளிலாவாகிய ஒரு காமில்ஆன காரண குருவைக் கொண்டு தெரிந்து, அனுஷ்டித்து வராதவர்களெல்லாம் மேற்சொன்ன படி முடிவு காலத்தில் அல்லாஹ்வின் ஜமாலியத்தான மணிவிளக்கைக் கண்டுகொள்ளாத நிர்ப்பாக்கியஸ் தர்களாய் கைசேதமடைந்து அழிய நேரிடும். இது மறுக்க முடியாத உண்மை. இதைப்பற்றி பெருமக் களாகிய மகான்களெல்லாம் தங்களுடைய ஞான நிலைக் கண்ணாடிகளில் எவ்வளவோ மேற்கோளாக வழிகாட்டிக்கொண்டு போகிறார்கள். அவைகளை யெல்லாம் இச்சிறிய நூலில் விவரிப்பதால் நூல் பெருத்துவிடுமென்று அஞ்சி அவைகளை எடுத்துக் காட்டாமல் இத்துடன் விடுகிறோம்.

வைத்திய முறையில் தேர்ந்ததொரு வைத்திய நிபுணருடன் அனுபவத்தில் பழகிக் கற்றுக்கொள் ளாத ஒருவன் வைத்தியப் புத்தகங்களை வாசிப்ப தால் மட்டும் வைத்தியம் செய்ய இயலாதல்லவா ! அஃதே போல் திரு குர்ஆன், ஹதீதுகளைக் கொண்டு

ஆத்மீக அருள் பெற்றுக் கொள்ளவதற்காக அவற்றில் என்ன இருக்கிறது என்ற அறிவு பெறுவது மட்டும் பயன் தந்துவிடாது. காமில் குரு ஒருவரிடம் சென்றடைந்து அவர் பயிற்றுவிக்கும் அனுஷ்டான முறைகளில் பூரணமாக ஈடுபட்டுச் செயலாற்றி வர வேண்டியது மிகவும் அவசியமாகும். ஏனெனில், ஷரீஅத்தில் தூய்மை "ஒலு', 'குஸ்லு" (பெருந்துடக்கு ஏற்பட்டபோது செய்யும் ஸ்நானம்) என்னும் உடல் சுத்திகள் ஆகும் ; 'தரீக'த்தில் தூய்மை துற்குணங்களைவிட்டு சுத்தி பெறுவது; ஹக்கீகத்தில் தூய்மை அல்லாஹ் அல்லாததைவிட்டு உள்ளத்தை பரிசுத்தமாக்கும் கைவல்யங்கள். இப் பரிசுத்தத் தன்மை அடுக்கடுக்காகப் புத்தங்களை வாசிப்பதால் மட்டும் கிட்டாது.

حُمِّلُوا التَّوْرَاةَ ثُمَّ لَمْ يَحْمِلُوهَا كَمَثَلِ الْحِمَارِ يَحْمِلُ أَسْفَارًا

ஏனெனில், ஆத்மீக முன்னேற்றத்துக்கு தடங்கலாகத் தன்னிலுள்ள பல நுண்ணிய வழிபறியாளர்களிடமிருந்தும், மறைந்து கிடக்கும் ஆத்ம விரோதிகளிடமிருந்தும், வெளிரங்கமான கல்விகளைக் கற்றறிந்த பெரும் பெரும் உலமாக்கள் கூடப் பாதுகாப்புப் பெற்றவர்களாய் இல்லை. மானிட அனுபவமே இதற்குப் போதிய சான்றாக விளங்குகிறது.

بَلِ الْإِنْسَانُ عَلَىٰ نَفْسِهِ بَصِيرَةٌ ۝

" இன்சான் தன் நப்ஸை நன்கு அறிந்தவனாய் இருக்கிறான் " என்பது ஆண்டவனின் திருவாக்கு.

### ஹஜரத் ரூமி(ரஹ்) அவர்களின் உபதேசம்

"வாய் வேதாந்தங்களைவிட்டு ஆத்மீக நிலையை அடைந்த ஆண்பிள்ளையாகிவிடு! அதாவது, வாய அளவில் ஞானம் பேசித்திரிவதையும், விவாதத்தில் ஈடுபடுவதையும் அடியோடு வெறுத்துவிட்டு ஒரு மூலையில் அமர்ந்து அல்லாஹு த் தஆலாவின் தரிசனம் பெற்றுக்கொள்ளக்கூடிய அனுஷ்டானங் களில் ஈடுபட்டுத் தேர்ச்சியடைவதுதான் மனிதனு டைய கடமை. ஆகையால், தேர்ந்ததொரு காமில் குருவின் அடிமைத்தனத்தை ஏற்றுக்கொள்! குரு வின் உதவியின்றி இந்த மகா பெரிய வழியைக் கடக்க முயல்பவன் அடர்ந்த காட்டில் வழியிழந்து தடுமாறிப் பாழ் கிணற்றிலேயே விழுவான்" என்று மௌலானா ரூமி அருளியுள்ளார்கள்.

### உலமாக்களுக்கு ஞானவான்களின் உதவி

ஹஜரத் இமாம் குஷைரி (ரஹ்) சொல்கிறார் கள்: எந்தக் காலத்திலுமே மாபெரும் கல்விமான்க ளாகிய உலகமாக்கள் தத்தம் காலத்திலுள்ள காமிலான ஷைகிடம் சென்று ஞான போதனையும் சாதனை அனுபவமும் பெற்று ஆத்மப் பரிசுத்த மடைந்துதான் வந்துள்ளனர். இன்றுவரை அவ்வி தம் நடந்துவருவது உண்மை. அந்தப் பரிசுத்தமான ஷைகுகளின் கூட்டத்தாரிடம் தன்னிகரிலாத ஒரு பயன் இல்லையாகில் நிலைமை இதற்கு நேர்மாற்ற மானதாகவே இருந்திருக்கும்."

### இமாம் பக்ருத்தீன் ராஜி அவர்களுக்கு ஹஜரத் இப்னு அரபி (ரஹ்)யின் நிருபம்

ஹஜரத் ஷைகு முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் "தப்ஸீரே கபீர்" எழுதிய ஹஜரத்

இமாம் பக்ருத்தீன் ராஜி (ரஹ்) அவர்களுக்கு நிரூ பம் ஒன்று எழுதி அனுப்பினார்கள். அதில் இமாம் அவர்களின் வெளிரங்கமான கல்வித் திறமையை ஆமோதித்துவிட்டு அவர்களுக்குச் சில உபதேச மொழிகளை அருளியுள்ளார்கள். அது வருமாறு :

"என் அன்புள்ள சகோதரரே, யாதாமொரு ஞானிகள் நாயகத்தின் சபையில் கலந்திருந்து ஷரீஅத்தின் உட்கருத்தை விளங்கிக்கொள்வீர்க ளாகில் அது உங்களை விரைவிலேயே ஷுஹூதே ஹக் என்ற இறைவன் தரிசனையை அடையும் பதவி வரையில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். அந் தத் தரிசனையைக் கொண்டு உங்களுக்கு ஆண்ட வன் புறமாக அகமிய ஞானக்கல்வி அருளப்படும். அறிவின் துணையால் அடையப்பெறும் கல்விக்கும், இந்த அகமிய மெஞ்ஞானச் சுடருக்கும் எவ்விதச் சம்பந்தமும் கிடையாது என்பதை நினைவில் கொள் ளுங்கள். ஏனெனில், ஆராய்ச்சி என்பது அறிவின் மாயா விநோதங்களின் மாறுபெயர்தான். இதற் கும், மெஞ்ஞான உண்மைக் கல்விக்கும் எவ்விதத் தொடர்புமில்லை. பூரண அகமியத்தை அருளக் கூடிய, மரணத்துக்குப்பின் உங்களோடு இருக்கக் கூடிய ஞானஜோதியை நீங்கள் அடையப்பெறுவது அத்தியாவசியமாகும். ஞான ஜோதியானது அல்லாஹுத் தஆலாவின் புறத்தால் காட்சியாகவும், கொடையாகவும் அருளப்படும் கல்வி என்பதை உணர்வீர்களாக! இக்கல்வியைத் தவிர்த்துள்ள சகல கல்விகளும், அவற்றின் பலாபலன்களும் மனிதனின் இவ்வுலக வாழ்க்கை சம்பந்தப்பட்டவரை மட்டுமே

பயன்படுவனவாய் இருக்கின்றன. மரணத்துக் குப்பின் அவற்றால் எந்தப் பயனும் விளையாது. இத ஞல் அழிந்துபோகக்கூடிய இவ்வுலகத்தை விட்டுக் கடந்தேகிய பின்னரே, தங்கள் உள்ளமை யுடன் தொடர்ந்து வரக்கூடிய மெஞ்ஞான ஜோதி யைப் பெறுவதற்கு முயற்சிப்பதே அறிவாளிகளின் கடமையாகும். அவ்விதக் கல்விகள் இரண்டே இருக்கின்றன. ஒன்று, "மஃரிபத்தே இலாஹி"— அல்லாஹுத் தஆலாவை அறிதல் என்னும் மெஞ் ஞானம். மற்றொன்று, மறுமையின் கல்வி (ஆத்மீக உலகத்தின் தெளிவு). ஆகையால், இவ்வுலக வாழ்க்கையில் இவ்விரண்டே கல்விகளைத் திட்ட மாய்த் தெளிந்தறிவதில் கருத்துக் காட்டவேண்டி யது உங்கள்மீது கடமையாகும். இதைக் கொண்டு மறுமையில் உங்களுக்குப் பயன் கிடைக் கும். இம்மை சம்பந்தப்பட்ட மற்றக் கல்விகளில் வாழ்க்கைக்கு முக்கியமாக அவசியமான (தேவை யுள்ள) அளவு மட்டும் - சன்மார்க்க வழியில் உதவி யளிக்கத்தக்க அளவுக்கு மட்டும் கூடக் - கற்ருல் போதும். மேலே குறிப்பிட்ட இரண்டு விதக் கல்வி களையும் பெறுவதற்கு, தனித்திருத்தல் - நன்னடத் தையில் அப்பியாசம் செய்தல்" - "அகயமிக் காட்சி பெறுதல்" - "ஆண்டவன் பேரில் மோகம் மேலிட்டு, அவன் பக்கம் அகமியத்தில் இழுக்கப் பட்டு, தெய்வ குணங்களின் பேரில் நிலைத்திருக்கச் செய்யும் வல்லபம்" ஆகிய அம்சங்களும் அவசிய மாகும்.

"என் அன்பரே, ஷரீஅத்தின் உட் கருத்தை யும், ரகசியத்தையும் விளங்கிக்கொள்ளாமல் வெறும்

வெளிப்படையான பதவுரைப் பூஜை செய்பவர்க ளும்,வாய்விவாதம், பொருமை, புறம்பேசுதல், இவை களையே தங்கள் நடப்பாகக் கொண்டிருப்பவர்களும், ஞான நாதர்களை ஏசிப் பேசுவதில் பெருமையடித் துக்கொண்டிருப்பவர்களும், உண்மை யதார்த் தத்தை அறியாமல் அதை நிகாகரிப்பவர்களும் என் னுடைய வார்த்தைகளைக் கேட்டு விளக்கமுற மாட் டார்கள். அன்பரே, ஞான நாதர்களாகிய கண்ணிய மிக்க மகான்களை நிராகரிக்காமல் இருப்பது உங்கள் கடமையாகும். இவர்கள் திரு குர்ஆனையும், உண்மை யான ஹதீதுகளையும் வெளிப்படையான கட்டளை களை விட்டும் மாற்றி விவரிப்பதாக ஒருபோதும் எண்ணவேண்டாம்! ஏனெனில், ஷரீஅத்தின் வெளிப் பொருளை மாற்றுவது "குப்ராய்" (நிராகரிப் பதாய்) இருக்கும்.

إِنَّ لِكُلِّ آيَةٍ ظَهْرًا وَبَطْنًا وَحَدًّا وَمُطَّلَعًا
إِلَى سَبْعَةِ أَبْطُنٍ

"உண்மையாவது, நபிபெருமான்(ஸல்) அவர் களின் திருமொழிப்படி "குர்ஆனின் ஒவ்வொரு ஆயத்துக்கும் வெளிப் பொருளும் உட்பொருளும் உண்டு; இன்னும், ஏழு எண்ணிக்கை வரையில் உட்பொருள்களும் உள்ளன." வெளிப் பொருளின் கருத்தாவது ஷரீஅத்தின் கட் டளைகளாகும். அக்கட்டளைகளுக்கு உட்பட்டு நல்

லொழுக்கத்தோடு நடக்க முடிகிறது. உட்பொருள் என்பதன் கருத்தாவது அகமிய மெஞ்ஞான ரகசியங்களாகும். இது சம்பூரண ஈமானும் தக்வாவும் கொண்டே அருளப்படுகிறது. இனி "முன்கிர்"- உண்மையை ஏற்றுக்கொள்ள மறுப்பவர்களாகிய விஷமிகள் - தங்கள் அறியாமையால் உண்மையாளர்களின் (மெஞ்ஞானிகளின்) சத்தியத்தை ஒப்புக்கொள்ளவிடாது, உங்களைத் தடுப்பார்களாயின் நீங்கள் அவர்களைக் கண்ணெடுத்தும் பார்க்க வேண்டாம்.காரணம், திரு குர்ஆனின் உட்பொருள்-ரகசியப் பொக்கிஷம்-இப்பதவுரைப் பூஜாரிகளைவிட்டும் மறைவானதாய் வைக்கப்பட்டிருக்கிறது. உண்மையாளர்களை எதிர்ப்பதும், பொய்ப்பிப்பதும் பொருமை கொள்ளுதலும், குரோதங் கொள்ளுதலுமே இவர்களின் சேவையாய் இருக்கிறது. உண்மையாளர்கள் ஒரு புதிய விஷயத்தையோ அல்லது புதிய ஷரீஅத்தையோ எடுத்துக் காட்டவில்லை. ஆனல், ஆண்டவனல் அவர்களுக்கு அருளப்பட்ட பரந்த ஒளி, உள் விளக்கம், இறைவன் தரிசனை இவற்றின் உதவியால் திரு குர்ஆனிலும், உண்மையான ஹதீதுகளிலும் பொதிந்துள்ள மறை பொருளான விளக்கங்களை அறிந்துகொள்கிருர்கள். வீண் விதண்டாவாதக்காரர்கள் விளக்கங்களைவிட்டும் வெகு தொலைவில் கிடக்கின்றனர். இவர்கள் ஞான குருநாதர்களின் உட்பொருள் விளக்கத்தைக் கொண்டு ஒருபோதும் உபதேசம் பெற்றுப் பயனடையவே மாட்டார்கள்."

காட்டரபிகளின் ஈமான்

قَالَ اللّٰهُ تَعَالٰى قَالَتِ الْاَعْرَابُ اٰمَنَّا قُلْ لَمْ تُؤْمِنُوْا وَلٰكِنْ قُوْلُوْا اَسْلَمْنَا وَلَمَّا يَدْخُلِ الْاِيْمَانُ فِيْ قُلُوْبِكُمْ

. "(நபியே,) காட்டரபிகள் கூறுகிருர்கள், 'நாங்கள் விசுவாசம் கொண்டோம்' என்று. நீர் அவர்களிடம் சொல்லும், 'நீங்கள் விசுவாசங்கொள்ளவில்லை; ஆனல், நாங்கள் வழிபட்டோம் என்று கூறிக்கொள்ளுங்கள். விசுவாசம் இன்னும் உங்கள் இருதயங்களில் நுழையவேயில்லை". (நீங்கள் உங்களை மூமின்கள் எனக் கூருதீர்கள்)

اَلْمُؤْمِنُ اَفْضَلُ مِنَ الْكَعْبَةِ

(மூமினுனவன் கஃபாவைவிடச் சங்கை பொருந்தியவன்.) அந்த ஈமான் (விசுவாசம்) "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல் லாஹி" என்பதேயாகும். கருத்தாவது: "ஜனங்களே, உங்கள் நப்ஸு அல்லாஹ் அல்ல. நானே அல்லாஹ்." இலாஹு என்பதன் கருத்து–நப்ஸு என்பதாகும். எனவே, பொடுபோக்காளர்கள் தங்கள் நப்ஸுக்கு வழிபட்டு இரவும் பகலும் அதற்குக் கீழ்படிந்து நடக்கிருர்கள்; அல்லாஹ்வுக்குக் கீழ்படிந்து நடக்கவில்லை".

أَفَرَأَيْتَ مَنِ اتَّخَذَ إِلٰهَهُ هَوَاهُ

"தன், (மனம் போன போக்கில்) ஆசாபாசங்களை (தான் வணங்கும்) விக்கிரஹமாக ஆக்கிக்கொண்டவனை நீ பார்க்கவில்லையா?" என அல்லாஹுத் தஆலா திருவுளமாயிருக்கிருன். ஜனங்களில் பலர் நப்ஸே அம்மாராவின் அடிமைகளாயுள்ளனர். அல்லும் பகலும் அதன் வழிபாட்டிலேயே கிடந்து உழலுகின்றர். இதுவே எல்லா விக்ரகங்களுக்கும் அடிமூடாயுள்ளது. அதனை இல்லாமலாக்க வேண்டும் என்றுதான் ஆண்டவன் கட்டளை இட்டுள்ளான். இறை வணக்கத்துக்குத் தடையாய் இருப்பதே - அல்லாஹ் அல்லாததே - விக்கிரகம் என்று கூறப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

**விக்கிரகம் என்பதன் அசல் கருத்து**

"இறைவன் ஒருவனே அல்லாது வேருக நாம் காண்பதே விக்கிரகம்" எனப் பெரியார் ஒருவர் தமது கவியில் கூறியுள்ளார். இறைவன் "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி" என்பதை முதல் கடமையாக ஆக்கியுள்ளான். அதாவது, மனிதன் எல்லா உள்ளமைத் தோற்றங்களையும் இல்லாமையாக்கிவிடும்படி கட்டளை இட்டிருக்கிருன். இந்தக் கலிமாவை (மூலமொழியை)விட மேன்மையான வேறொரு மொழி இறங்கவே இல்லை. இக்கலிமாவின் தத்துவமானது எழுபது வருஷம்

ஒருவன் காபிராய் இருந்தாலும்(ஏக நாயன் உண்டென்னும் உண்மையை நம்பாத அஞ்ஞான இருட்டில் இருந்திருந்தாலும்), ஒரு தடவை முழு மனத்துடன் கலப்பறுதலாக இக்கலிமாவை விண்ணப்பம் செய்வானாகில் அவன் சொர்க்கவாதியாகி விடுவான் என்பது நபி மொழி. இந்த ஓர்மையான கலிமாவை வாயால் விண்ணப்பஞ்செய்து மனத்தில் உண்மை என்று ஒப்புக்கொள்ளாதவரையில் ஒருவன் முஸ்லிமாக முடியாது.

கலிமாவின் உட்கருத்து

இந்த மணமான கலிமாவின் கருத்து (இறைவனின் ஏகத்துவத்தை) அறிவதாகும். மஃரிபத்தென்னும் இந்த ஞானத்தைச் சுமந்த இவ்வடியானின் அமல்கள் சாலிஹானவையாய் இருக்கும். முதலாவதாக, உலக ஆசாபாசங்களை விட்டும் அகச்சுத்தி பெறுவதற்கு வணக்கம், நற்குணங்கள் முதலிய சகல அனுஷ்டானங்களும் அவசியமானவையாய் இருக்கின்றன. அதன் பின்னர் இப் பரிசுத்தத் தன்மையை நிலைநிறுத்துவது மிகவும் முக்கியமாகும். ஆனதால் “காமில் ஈமான்” (சம்பூரண விசுவாசம்), “இல்மே மஃரிபத்” (ஞானத் தெளிவு)தின்மீது நிலைத்ததாய் இருக்கிறது. ஞானமின்றி சம்பூரண விசுவாசமில்லை. (அதாவது ஈமான் சம்பூரணமாகாது).

ஹதீதில் சொல்லப்பட்டுள்ளது: (ஒரு நாள்) சஹாபாக்கள், “நாயகமே, அமலில் (நடத்தையில்) மேலானது எது?” என்று வினவினார்கள். அதற்கு நாயகம்(ஸல்) அவர்கள், “மஃரிபத்துல்லாஹ்வென்

னும் இறைவனை அறியும் ஞானக் கல்வி என்று பதிலளித்தார்கள். இதற்குச் சஹாபாக்கள், "நாங் கள் நடத்தையைப்பற்றி கேட்கிறோம்" என்றார்கள். நாயகம் (ஸல்) அவர்கள் மறுபடியும் அதே பதிலைக் கூறினார்கள். மூன்றும் தடவையும் சஹாபாக்கள், "நாங்கள் நடத்தையைப் பற்றிக் கேட்கிறோம் நாய கமே! தாங்கள் அறிவைப்பற்றிக் கூறுகிறீர்கள்" என்று வினவினர். எனவே, நாயகம் (ஸல்) அவர் கள், "அறிந்து நடக்கும் நடத்தை பயன் தரும். அறி யாமல் செய்யும் அமல்கள் பயனற்றுப்போகும்" என்று திருவுளமானார்கள். கருத்தாவது : உங்களை நீங்கள் கலிமாவைக் கொண்டு நன்கறிந்து சொற்ப நேரம் வணங்கும் வணக்கமாவது நீங்கள் உங்களை அறியாமல் வெளிப்படையாய் செய்யும் வணக் கத்தைவிட பிரயோஜனமானதாய் இருக்கும். ஞான அறிவின்றி நடைபெறும் நடத்தை பயனற்றுப் போகிறது. இக்கருத்தையொட்டியே,

اَوَّلُ الدِّيْنِ مَعْرِفَةُ اللهِ

"மார்க்கத்தில் முதன்மையானது இறைவனை அறி யும் ஞானம்" எனக் கூறப்பட்டிருக்கிறது.

**இறைவன் எங்கிருக்கிறான் ?**

"அய்னல்லாஹு"(அல்லாஹ் எங்கிருக்கிறான்?) என்று ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு உமர் (ரலி) அவர்கள், நாயகம் (ஸல்) அவர்களை வினவவும், "அடியார்களின் கல்புகளிலே" என்று திரு நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

"வானமும், பூமியும் உன் விஸ்தீரணத்தை எங்ஙனம் எத்திக்கொள்ள முடியும்! என் அகமே நீ இருப்பதற்குப் பொருத்தமானது" என்பது ஒரு பெரியாரின் பொன்மொழி. (இது ஹதீதே குத்ஸி யிலுள்ள கருத்து.)

**அகச்சுத்தி செய்யும் முறை**

தாஊது நபி (அலை) அவர்களுக்கு 'ஒஹி' (தீர்க்கதரிசிகளுக்கு இறைவனால் அறிவிக்கப்படும் தெய்வ வெளிப்பாடு) அறிவிக்கப்பட்டது: "நம் கண்ணியத்தை வெளிப்படுத்துவான் வேண்டி நமக்காக ஒரு தூய்மையான வீட்டைத் தயார் செய்வீராக!" என்று. தாஊது நபி (அலை) அவர்கள், "ரக்ஷகனே, அது எந்த வீடு?" என வினவ, "விசுவாசிகளின் அகம்" என்று அறிவிக்கப் பட்டது. "அகச்சுத்தி செய்வது எங்ஙனம்?" என்று அவர்கள் கேட்க, "பேரன்பு என்னும் அக்கினியை மூட்டி வேற்றுமை என்னும் அழுக்குகளை எரித்துச் சாம்பலாக்குவீராக!" என்று அவர்களுக்கு அறிவிக் கப்பட்டது.

اَلْعِشْقُ نَارٌ تُحْرِقُ مَاسِوَى الْمَحْبُوْبْ

"பேரன்பானது, தன் அன்பன் அல்லாததை எரித்துக் கரிக்கும் அக்கினியாகும்"

**இருவகைக் கல்பு**

"கல்பு" என்னும் பதத்துக்கு இரண்டு பொருள் கள் உண்டு. 1. நெஞ்சுக்குள் இடது பக்கத்தில் இருக்கும் மாங்காய் வடிவான மாமிசத் துண்டமாகிய

இருதயம். இந்த 'மஜாஸி' கல்பைப் பற்றி விவரிப் பது நம் கருத்தல்ல. இது வைத்தியக் கல்வியைச் சேர்ந்தது. இந்தக் கல்பு மிருகங்களுக்கும் பிணங்க ளுக்கும் கூட உண்டு.

2. இரண்டாவதாகிய கல்பு ஜோதிமயமாகிய ஓர் ஆத்மீகத் தத்துவ ரகசிய நுட்பம். இதற்கும் முதல் கல்பாகிய ஹிருதயத்துக்கும் ஒருவிதக் காந்த சம் பந்தமுண்டு. இவவாத்மீகக் கல்பையே அகம் என அழைக்கிறோம். இவ்விரண்டுக்கும் பரஸ்பரம் நெருங் கிய உறவு உண்டு. இவ்வுறவின் அனுஷ்டான பலனைக்கொண்டு ஹிருதயம் என்னும் கல்பும் ஒளி மயமாகிவிடும். அகம்தான் பகுத்தறிவுள்ள மனித னின் உண்மை ரகசிய நுட்பமாய் இருக்கிறது. திரு குர்ஆனில் கல்பு என்று சொல்லப்பட்டுள்ள தெல்லாம் இந்த அகம் என்ற ஹக்கீகத்தே இன்சா னுகிய நுட்பத்தைக் குறிப்பதே. இந்த அகம்தான் மனிதனில் பார்ப்பதும், கேட்பதும், பேசுவதும், வஸ் துக்களின் உண்மையை விளக்கி அறிவதுமாகும். இதனை ஆலமெ மலகூத் என்றும், மிதால் என்றும், மும்கினுல் உஜூத் என்றும் அழைக்கலாம். இது சூக்குமமாகும். இதற்கு வலம்- இடம் - கீழ்-மேல் முன்-பின்-அருகாமை-தூரம் என்ற திக்குத் திசை யாதொன்றுங் கிடையாது. (இக்கருத்துக் கொண்ட திரு குர்ஆன் ஆயத்தையே இந்நூலின் தலைப்பில் எழுதி யுள்ளோம்.)

**ஆலமெ மலகூத் அல்லது ஆலமெ மிதால் என்னும் சூக்கும உலகம்**

அது ஒரு நளின ஜோதி சரீரமாய் இருக்கும். அதற்கு உடைதல், சேர்தல், அழிதல் இல்லை.

இரண்டு லோகங்களின் கிரியைகள் அனைத்தும் அதை யொட்டியவையாகவே இருக்கின்றன. நன்மை, தீமை, கேள்வி, கணக்கு, இன்பம், துன்பம் வேதனை-யாவும் அதன் மீதிலேயாகும். இந்த நாசூத் தென்னும் உடலிலே அந்தச் சூக்கும சரீரம் நிலைகொண்டுள்ளது, கம்பியில் தொனி இருப்பது போலாம். காற்றினாலோ அல்லது வேறெவ்விதமோ கம்பி அசைவதால் அதில் தொனி உண்டாகிக் கம்பியின் லட்சணத்தை வெளிப்படுத்திப் பூர்த்தி யாக்கி வைப்பதுபோல் அந்தச் சூக்கும சரீரம் இந்த ஸ்தூல சரீரத்தைச் சம்பூரணமானதாக்கிவிடுகிறது. அது ஆலமெ ஜபரூத் தென்னும் ஆத்ம உலகத்துக் கும் நாசூத் தென்னும் பூத உலகத்துக்கும் நடு வாகிய பர்ஜக் என்னும் மத்திய ஸ்தானமாகும். சிலர் விளக்கம் இன்மையால் அதையே ஆண்ட வன் என்கிறார்கள். (இந்தத் தவறான கொள்கையை விட்டும் ஆண்டவன் நம்மைக் காப்பானாக!) ஒளலி யாக்களுக்குச் சித்தியாகும் அகவிளக்கமும் அபூர்வ நிகழ்ச்சிகளும் இந்தச் சூக்குமத்தின் விளக்கத்தினா லேயே உண்டாகின்றன. ஏனென்றால், சூக்கும சரீரம் ஜடலங்களனைத்தையும் அடைய வளைந்ததாய் இருக்கிறது. பூத உலகம் உண்டாவதற்கு முன்பு (மீதாக் என்னும் நாளில்) ஆத்ம உலகில் சகல ஆத் மாக்களுக்கும் அந்தச் சூக்கும சரீரம் இருந்தது. இப்போது இந்த ஸ்தூல சரீரம் அதற்கு இருப்பிட மாயிருக்கிறது. அதற்குத் தூக்கமோ மரணமோ கிடையாது. ஸ்தூல சரீரம் அதற்குப் போர்வையாய் இருக்கிறது. அல்லது, அது பழம் என்றும், ஸ்தூல சரீரம் மேல் தோல் என்றும் உணர்வீர்களாக!

(அலஸ்து பிரப்பிகும்) "நான் உங்கள் நாயனல்ல வா?" என்னும் வினு அதை நோக்கியே விடுக்கப் பட்டது. அது அடைபட்டிருப்பதால் தஜல்லி யாத்தென்னும் இறைவனின் வெளிப்பாடுகளும், தாஸிராத் தென்னும் குணபாடுகளும் காணப்படுவ தில்லை. இந்தப் பூத சரீரத்தின் சிறையைவிட்டும் வெளியேறுவதே கஷ்பு என்னும் அகவிளக்க மாகும். அது ஆத்மீகம் எனப்படும். ஏனெனில், அது தோற்ற தேட்டமுடையதாய் இருக்கிறது. இத் தேட்டமில்லாததே ஆத்மாவாகும். இது தில் (உள் ளம்), பூஜ் (தீர்க்கதிருஷ்டி) என்றும் சொல்லப் படும்.

"கோஷ்த்கே முஸ்கே கூ தூ தில் ஜான்த்தா
அஸ்லு தில் ஹே பூஜ் நஹீ(ன்) பஹ்சான்த்தா

(மாமிசத் துண்டமாகிய ஹிருதயத்தை நீ உள்ளம் என்று எண்ணுகிருய். உண்மையான உள்ளம் தீர்க்கதிருஷ்டிதான் என்பதை நீ விளங்கிக்கொள்ள வில்லை.)

இதுவே மனித ஆத்மாவின் அசலாகும். நபி பெருமான் (ஸல்) அவர்கள் சந்நிதியில் ஜிப்ரயீல் (அலை) இந்தச் சரீரத்தைக் கொண்டே பிரசன்னம் ஆகிருர்கள். தனக்கு வேண்டிய எவ்வித ரூபத்தை யும் எடுத்துக்கொள்ள இச்சரீரத்துக்குச் சக்தியுண்டு. ஜீவியம், சுகவாழ்வு, வியாதி முதலியன இதன்மீதே ஏற்படுகின்றன. இது ஜடலத்தை விட்டும் நீங்கி விட்டால் அதற்கு மரணம் என்று பெயர் சொல்லப்ப டும். மலக்கூத்தென்னும் சூக்கும சரீரம் நாசூத்தென் னும் ஜடலத்தை விட்டும் வேருனதல்ல. உண்மை

யில் இவ்விரண்டும் ஒன்றே. ஆனால், அந்தஸ்து களின் மாறுபாட்டில் வித்தியாசம் சொல்லப்படுகி றது. ஜடலம் அன்றி சூக்கும சரீரத்துக்கு வேறு இருப்பிடமில்லை. ஜடலம் வெளிரங்கமாய் இருப்பது போல் சூக்குமம் உள்ரங்கமாய் இருக்கிறது. வெளிப் படையாய்ப் பார்க்கும்போது இரண்டாகத் தெரி கிறது; ஆனால், ஒரே வகையானது. சூக்குமம் "வஹ்ததத்தின்" (நூரே முஹம்மதியாவின்) நிழலாக இருக்கிறது; ஜடலம் "வாஹிதிய்யத்தின்" (ஹக்கீ கத்தே இன்சானியாவின்) நிழலாக இருக்கிறது. இவ் விரண்டுக்கும் இடையில் "மூச்சு" சுவரைப் போல் இருக்கிறது. சூக்கும சரீரநிலை கிட்டுபவருடைய நிலை 'பகா' வென்னும் நித்தியானந்த நிலையாய் இருக்கும். இவ்வித நித்தியானந்த நிலை பெற்றவர்களே ஒளலி யாக்களின் கூட்டத்தில் சேருவார்கள். (இவ்விஷயம் ஹதீதுகளிலும் ஹதீது குத்ஸிகளிலும் உள்ள மறை பொருள்களாகும்.) முக்கியமாக, இரண்டே லட்ச ணங்களைக்கொண்டு இந்த அகம் வருணிக்கப்படுகி றது, அதாவது பார்ப்பதும், உணர்வதும் என்ற இரண்டு லட்சணங்களை உடையதாகவே அகம் இருக்கிறது. இவையலாமல் அகம் இல்லை. இதனை நன்கு தெரிந்து உணர்வீர்களாக!

مَثَلُ نُوْرِهٖ كَمِشْكٰوةٍ فِيْهَا مِصْبَاحٌ

"அவன் வெளிச்சத்துக்கு உவமை ஒரு மாடக் குழியில் பழிங்குக் கண்ணாடியுள் இருக்கும் விளக் காகும்."

என்னும் குர்ஆன் திருவாக்கிலுள்ள "நூர்" என்பது மூமினுடைய "அகஜோதி"யே என்று ஹஜரத் உபை இப்னு கஅப் (ரலி) கூறுகிறார்கள். ஹஜரத் ஜைத் இப்னு அஸ்லம் (ரலி) "லவ்ஹுல் மஹ்பூல்" (விதிவசப் பட்டோலை) என்று குர்ஆனில் குறிக்கப் பட்டிருப்பதும் மூமினுடைய இந்த அகம்தான் என்கிறார்கள்.

"அர்ஷு (அல்லாஹுத் தஆலா தான் நாடிய படி தரிபட்டிருக்கும் தானம்), குர்ஸி (ஆசனம்), ஏழு வானங்கள் முதலியவற்றையும் உன் அகத்தின் உள்ளேயே நீ கண்டுகொள்வாயாக !" என்று கவிஞர் ஒருவர் பாடியுள்ளார்.

நித்தியானந்த ஈடேற்றம் ஞானமின்றிக் கிட்டாது

அகச் சுத்தியடைந்த மூமீன்களின் கல்பு அழிவதில்லை. அவர்களின் ஞானஜோதி சிறிதும் குன்றாமல் மரணத்துக்குப் பின்னும் அவர்களுடன் நிலைத்திருக்கும். இதுவே நித்திய வாழ்வு என்று சொல்லப்படுகிறது. இவ்வாத்மீக நித்திய ஈடேற்ற வாழ்வு ஞானக் கல்வியின்றி எவருக்கும் கிடைக்கப் பெறாது. இவ்வாழ்வில் சிலர் வேறு சிலரை விடச் சங்கை பொருந்தியவர்களாய் இருக்கிறார்கள். இது (இப்பாகுபாடு) அவரவர்களுக்கு அருளப்பெற்ற மெஞ்ஞான ஜோதியின் "கதரை" (அளவை) பொருத்ததாய் இருக்கும். இந்த ஜோதியே இம்மையிலும் மறுமையிலும் மனித வாழ்க்கையின் அழகும் பூர்த்தியுமான லட்சியமாய் இருக்கும். இந்த ஞான ஜோதி அகத்திற்கேயன்றி மற்றெந்த உறுப்புக்கும் அருளப்படுவதில்லை. ஏனெனில், இறைவனை

முடுகுதல், அவனை அறிதல், அவன் கோட்பாடு களின்படி செயலாற்றுதல் முதலிய அனுஷ்டானங் கள் யாவும் அகத்தின் செயல்கள்தாம். மற்ற உறுப்பு கள் அதற்குக் கீழ்படிந்து பணி செய்யும் தொண்டர் களே. அரசன் குடிகளையும், எஜமான் வேலையாட் களையும் ஆட்சி புரிவதுபோல் அகம் மற்ற உறுப்புக் களின்மீது ஆட்சி செலுத்துகிறது. ஏவல் விலக்கல் யென்னும் கட்டளைகளைக்கொண்டு ஏவப்பட்டதா னது இந்த அகம்தான். அல்லாஹ் அல்லாததை விட்டும் காக்கப்பட்டுப் பரிசுத்தத் தன்மை பெற்ற அகமே இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படும். அல்லாஹ் அல்லாததன் பக்கம் கொழுகுதல் உள்ள அகத்துக்கு இறைவனைவிட்டும் திரை போடப்படும். இந்தத் திரை போடப்பட்ட அகத்துக்கே (மறுமை யில்) கேள்வி கணக்குகள் உண்டு. ஆனதால், ஏவல் விலக்கல் என்னும் சட்டதிட்டங்களுக்கும், இறைவனை முடுகித் தன் லக்ஷியத்தை அடைவ தற்கும் அருகதை பெற்றிருப்பது மனிதனின் உண்மை உள்ளமையான இந்த அகமே என்றுணர் வீர்களாக! இந்த விஷயங்களின் விவரங்கள் காமி லான ஷைகை அடைந்து அவர்களின் உபதேசப் படி நடந்து உணரவேண்டியவை யாகும்.

**ஆத்மா தாத்தின் கண்ணாடி: கல்பு, திருநாமங்கள்**

**சிபாத்துக்களின் கண்ணாடி**

சிருஷ்டிகர்த்தாவாகிய அல்லாஹுத் தஆலா வின் "தாத்" (மூலகாரணத்)துக்கு ஆத்மா கண் ணாடியாய் இருப்பதுபோல் இறைவனின் திருநாமங் களுக்கும் வருணிப்புக்களுக்கும் அகம் கண்ணாடியா

யுள்ளது. ஆத்மாவில் விரிவின்றி வித்தைப்போல் மொத்தமாய் உள்ளவை அனைத்தும் அகத்திலே விருக்ஷம்போல் விரிவானவையாய் உள்ளன. ஆன தால், அகமும் ஆத்மாவைப் போலவே எல்லையும் திசையுமற்றதாயும், இடம் என்னும்கட்டுப்பாட்டுக்கு வசப்படாததாயும் இருக்கிறது. அகத்தின் உள்ளமை (அசல்) சூக்கும உலகத்தையும், அதன் சாய்கை (நிழல்) பூத உலகத்தையும் சேர்ந்தவை. அறிவு, நப்ஸ் இவைகளின் தத்துவங்களின் சேர்க்கையினால் சூக்கும உலகில் உள்ளவைகளின் கோலங்கள் சிருஷ் டிகளின் ரூபத்தில் வெளியாகிப் புலன்களின் வாயி லாக அறியப்படுகின்றன. அல்லாமல் ரூபங்கள் அனைத்தும் யதார்த்தமான உள்ளமையற்ற (கானல் நீரைப் போன்ற)வை. ஆனதால், ஸ்தூல சிருஷ் டிகளை உள்ளமையற்ற கோலங்கள் (மாயை) என் றும், மன ஊசாட்டக் கோலங்களென்றும் சொல்கி றார்கள். ஆயினும், இவை பயனற்றவை என்று எண்ணவேண்டாம். இச் சிருஷ்டி கோலங்களில் தான் இறைவனுடைய அஸ்மா, சிபாத்து என்னும் திருநாமங்களின் ஆதாரங்களும், வர்ணனைகளும் தத்துவ வெளிப்பாடுகளும் வெளியாகின்றன. இவை களே, விளக்கமற்ற வெளிரங்கக் கண்ணோட்ட முடையோருக்குத் திரையாகவும், விளக்கமுள்ள அகக் கண்ணோட்டமுடையோருக்கு (மெஞ்ஞானி களுக்கு) மூலாதிகர்த்தாவின் தரிசனையடைவதற் கான துணையாகவும் இருக்கின்றன. நகைகளின் மூலம் பொன்னையும், பாத்திரங்களின் மூலம் மண் ணையும், விருக்ஷத்தின் மூலம் வித்தையும், கிரணங்க ளின் மூலம் சூரியனையும் தெரிந்துகொள்வதுபோல்

மெய்ஞ்ஞானிகள் இச் சிருஷ்டிக் கோலங்களின் மூலம் சிருஷ்டிகர்த்தாவின் உள்ளமையை (தாத்தை) தெளிந்தறிகிறார்கள்.

## நப்ஸ் – அறிவு – கல்பு ஆகியவற்றின் இயல்புகள்

பூத உலகச் சிருஷ்டிகள் தரிபட்டிருப்பதற்காக "நப்ஸ்" தாயின் ஸ்தானத்திலும், "அறிவு" தகப்பன் ஸ்தானத்திலும் இருக்கின்றன. வஸ்துக்களின் பேரில் ஆசைக் கொள்வதே நப்ஸின் குணம் ஆன தால் உலக ஆசாபாசங்களை விருத்தி செய்யத்தான் நப்ஸ் முயற்சித்துக்கொண்டே இருக்கிறது. இம் முயற்சியில் வெற்றியடைந்தால் அகத்தையும் தன் வசப்படுத்திக்கொள்கிறது. இந்த நிலைமையே துக் கங்களுக்கும் துன்பங்களுக்கும் காரணமாகும். "அறிவு" வஸ்துக்களை மட்டும் கொண்டு திருப்தி யடைவதில்லை; உணர்தல், விளக்கம், தீர்க்க திருஷ்டி இவைகள் அறிவின் குணங்களாகும். ஆனதால் அது ஆராய்ச்சியையே தன் லக்ஷிய மாகக்கொண்டு அகத்துக்கும் இன்பமளிக்கிறது. இது சுகத்துக்குக் காரணமாய் உள்ள நிலையாகும். ஆனால், சுகம் துக்கம் இவ்விரண்டு நிலைமைகளும் அகத்தின் லக்ஷியத்துக்குப் புறம்பானவை. இவ் விரண்டும் அகத்தைப் பஞ்சபூத உலகச் சிறையில் கட்டிப்போடும் விலங்குகளாகும். சுக துக்க மாயை யென்னும் இவ்விலங்குகளை விட்டும் வெளியேறி விடுதலைபெறும் அகத்துக்கே நித்தியானந்தம் என்னும் மோட்சம் கிட்டும். அதாவது, ஆத்மா வுடன் ஏகரீதி பெற்று இறைவனின் தஜல்லியாத்து களாகிய அருள் காட்சிகளுக்குக் கண்ணாடியாய்த்

தன் உள்ளமையில் ஹக்குடைய உள்ளமை பிரதி பலிக்கக் காணும். இந்தத் தானத்தில்தான் "அனல் ஹக்"—"இன்னீ அனல்லாஹ்" என்ற உண்மை மொழிகள் ஓலமிடப்படுகின்றன. ஆகை யால், புதை குழியைவிட நெருக்கமும் இருளும் அடைந்த தன் நிழலாகிய இந்தப் பூத உலகச் சிறை யில் சிக்காமல் சுகதுக்க பந்தபாசங்களை உடைத்து வெளியேறினவனே "பரிசுத்த ஆத்ம ரீதி" அருளப் பெறுகிருன். இதுவே நித்தியானந்த சுவர்க்கமும் இறைவனின் தரிசனமும் ஆகும். "ஆத்மா" இவ்வு லகப் பாசத்தை வெறுக்கிறது. 'நப்ஸ்' இம்மையின் பந்தபாசத்தின்மீது காதல் கொண்டிருக்கிறது. "அகம்" (கல்பு) இவ்விரண்டுக்கும் மத்தியிலிருப்ப தால் ஆத்மா, நப்ஸ் ஆகிய இரண்டில் எது பலமா கிறதோ அத்துடன் கலந்துவிடுகிறது. ஆனதால், இவ் விஷயங்களை அறிவதும், இவைகளின் குணங் களையும் லக்ஷணங்களையும் விளங்கிக்கொள்வதும் சாலிஹீன்களின் அடிப்படையான நேர்வழியாகும். இதுவே உண்மைச் சன்மார்க்கத்தின் (இஸ்லாமின்) லக்ஷியம். இவ் வழியில் நடத்தி வைக்கும் ஆசான் களாகிய சூபியாக்களின் கூட்டுறவும், அன்பும், அவர்கள் தரும் பயிற்சியுமின்றி இஸ்லாமின் லக்ஷியமாகிய மஃரிபத்தென்னும் மெஞ்ஞானம் உண்டாகாது.

**ஜீவியத்தின் இருவகை**

ஜீவியம் இரண்டு வகைப்படும். உடல் சம்பந் தப்பட்ட மனு ஜீவியம் ஒன்று; அகம் சம்பந்தப்பட்ட மெஞ்ஞான ஜீவியம் மற்ருென்று. மனு ஜீவியம் ஸ்தூல சரீரத்தின் அழிவுடன் அழிந்துவிடுகிறது.

كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ

"நப்ஸ்கள் அடங்கலும் மௌத்தின் (மரணத்தின்) ருசியை அனுபவிப்பவைகளாய் இருக்கின்றன" என்பது அல்லாஹ்வின் திருவசனம்.

மெஞ்ஞான ஜீவியம் அகம் சம்பந்தப்பட்டது. அகம் ஆத்மீக ரீதி பெற்று வாழ்வதிலிருந்து மெஞ்ஞான ஜீவியம் உண்டாகிறது. இது மரணத்துக்குப் பின்னும் அழிவதில்லை. அல்லாஹ்வின் ஔலியாக்கள் இம் மெஞ்ஞான ஜீவியம் என்னும் ரூஹுல் குத்சைக்கொண்டே வாழ்கிறார்கள். அல்லாஹுத் தஆலா திருவுளமாகிறான்:

فَلَنُحْيِيَنَّهُ حَيٰوةً طَيِّبَةً

"மேலும், நாம் அதனை (அகத்தை) பரிசுத்த ஜீவியத்தைக் கொண்டு பரிபாலிக்கிறோம்" என்று.

அல்லாஹுத் தஆலாவின் முடுகுதல் ஞானத் தெளிவைப் பொறுத்த விஷயம். தெளிவு அதிகரிப்பதற்கேற்ப முடுகுதலும் அதிகமாகும்.

மஃரிபத்து நித்திய ஜீவியமாய் இருக்கிறது

ஒரு நாள் ஹஜரத் அலி (ரலி) நபிபெருமான் (ஸல்) அவர்களிடம் தம் வாழ் நாள் வீணாகாமல் காத்துக்கொள்வதற்கான ஒழுக்கத்தைக் காட்டி

அருளும்படி கண்ணீருகுத்தவர்களாகக் கேட்ட போது, நபிகள் பிரான் (ஸல்) அவர்களைப் பார்த்து, "தன்னை அறிவீர்களாகில் உங்கள் வாழ்நாள் வீணுகாது. முடிவில் உங்களுக்கு அந்த ஞானம் உதவும்" எனப் பகர்ந்தார்கள். ஆகையால், சகோதரனே, நீ இந்த வழியை மறந்திடாதே! சூபியாக்கலைக் கொண்டு நீ உன் 'தன்னை' அறிந்துகொள்!

**நபிபெருமான் (ஸல்) வரிசை பெற்றவர்களாய் இருப்பதன் மர்மம்**

நபிபெருமான் (ஸல்) ஹஜரத் அபூபக்கர் ஸித்தீக்(ரலி) அவர்களிடம், "நான் தாங்கள் யாவரிலும் வரிசைபெற்றவனுக இருப்பது அதிக நோன்பினுலும், தொழுகையினுலுமல்ல. ஆனுல், என் உள்ளத்தில் இறக்கப்பட்டிருக்கும் ஒரு ரகஸியத்தின் பொருட்டால்" என்று திருவுளமானுர்கள். அல்லாஹுத் தஆலா திருவுளமாகிருன்:

يُلْقِى الرُّوحَ مِنْ اَمْرِهٖ عَلٰى مَنْ يَّشَآءُ مِنْ عِبَادِهٖ

அதாவது, ரகஸியத்தைத் தன் கட்டளையால் தன் அடியார்களில் தான் நாடியவர்கள்மீது இறக்கிவைக்கிருன்.

**இறைவனின் ரகசியம்**

நாயகம் (ஸல்) அவர்கள் கொணர்ந்த ரகசியம் முக்கியஸ்தர்களாகிய தேர்ந்த மகான்களின் உள்ளத்தில் உதிப்பாக்கப்படுவதுண்டு. அவர்களின் கூட்டம் பதினுன்கு கான்வாதாக்களாகவும், நான்கு

பீர்களாகவும் பிரபல்யமாகி ஞானத்துறையில் வழி காட்டிகளாக உதவி புரிகிறுர்கள். இவ்வித ரகசிய அருள்பெற்ற ஞானகுரு நாதர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் குருவாக ஒப்புக்கொண்டு அவர் களிடம் அடைக்கலம் புகுந்து ஞானவழியில் மோகங் கொண்டு தேடுபவர்களுக்கு அது அருளப்படுகிறது.

புகழும் ஸ்தோத்திரமும் தாத்தென்னும் மூல காரண (அல்லாஹ்)த்துக்காகவேதான். அவன் எப்படிப்பட்டவனுயின் "அன" வென்னும் "ஹக்கீ கத்தே முஹம்மதியா"வாகிய ரகசியத்தை "ஜபரூத்" தென்னும் ஆத்மீகத்திலும், அதனை மலக்கூத் தென் னும் சூக்குமத்திலும், அந்த சூக்ஷம சரீரமாகிய ரூஹுல் குத்சியை நாசூத் தென்னும் ஸ்தூல ஜடலத் திலும் அமைத்து வைத்தான். இவைகளனைத்தும் இன்சானுக்குள்ளே அடங்கியுள்ளன. இவ்விதம் அமைத்து வைத்த அல்லாஹு ஜல்ல ஜலாலு வுக்கே புகழ் அடங்கலும் உரியது.

**ஹஜ்ரத் அலி கர்ரமல்லாஹு அவர்கள்**
**தன் புத்திரருக்குச் செய்த ஞான போதனை**

ஹஜ்ரத் அலி(ரலி) தம்முடைய கண்மணியாகிய புத்திரரை நோக்கிச் சொன்னுர்கள்: "மகனே, உன் னிலே உன்னை நீ சிந்தனை செய்வது உனக்குப் போதுமானதாகும். அதாவது, நீ இறைவனின் தரி சனம் பெறவேண்டுமானுல் உன்னுள் சிந்தனை செய். இறைவன் உன்னிலேயே இருக்கிருன்; உன்னைவிட் டுப் பிரிந்தில்லை. ஏனெனில், உன்னை விட்டு நீங்கி யது ஒன்றுமில்லை. உன்னுள்ளே ஒரு வியாதி (மனக் கற்பனைகள்) உள்ளது. நீ அதை அறியவில்லை.

மருந்தும் உன்னிடமே உள்ளது; நீ அதைப் பார்ப்ப தில்லை. உன் பிணியும் அதன் மருந்தும் உன்னிலேயே உள்ளன. நீ உன்னை ஒரு சிறு உடல் என்று எண்ணு கிருய். ஆனுல், உண்மையில் உன்னிலே ஒரு பெரிய உலகம் புகுத்தப்பட்டிருக்கிறது. பார்வையில் தோன்றுவதெல்லாம் வெறும் கற்பனையாகும். பெரிய உலகம் உன்னுள்ளேயே இருக்கிறது. ஒரு வஸ்துவும் உன்னைவிட்டும் நீங்கியில்லை. இங்கு "மொத்தம்"--"பிரிவினை" என்ற பாகுபாடுதான் (வித்தியாசம்). ஆக மனிதன் ஓர் ஆச்சரியமான மொத்தம்."

ذٰلِكَ الْكِتٰبُ لَا رَيْبَ فِيْهِ

(அந்த வேதம், அதில் சந்தேகமில்லை-குர்ஆன்.)

உண்மையில் அந்த வேதமாவது மனிதனின் உள்ளமையே.

كُلٌّ فِيْ كِتَابٍ مُّبِيْنٍ ۝

அடங்கலும் விளக்கமான (உள்ளமை) வேதத்தில் இருக்கிறது.

இனி மனிதர்களுக்கெல்லாம் மேலானவர்களும் பரிபூரண மனிதருமாகிய நாயகம் (ஸல்) அவர்கள் பேரில் இறக்கப்பட்ட அந்த வேதம் மனிதனின் உள் ளமையின் புகழை உரைப்பதாயும், அதனுடைய மொத்தமான விரிவான நிலைமைகளை விவரிப்ப

தாயுமிருக்கிறது. அதாவது, தௌஹீதையும் தப் ஸீலையும் விளக்கி உரைக்கிறது.

(வேதத்தின் முதல் அத்தியாயமாகிய) சூரத்து பாத்திஹா "உம்முல் கித்தாப்", (வேதத்தின் தாய்) ஆக இருக்கிறது. ஏனெனில், வேதத்தில் விரிவாக இருப்பவை சூரத்து பாத்திஹாவில் மொத்தமாகவுள் ளன. அஃதேபோல்பாத்திஹா பிஸ்மில்லாஹ்விலும், பிஸ்மில்லாஹ் "பே" என்னும் அட்சரத்திலும், "பே" அதன் நுக்கத்தாவிலும் (புள்ளியிலும்) அடங்கியுள் ளன. பிஸ்மில்லாஹ்வின் பேயுடைய நுக்கத்தா வானம், பூமி, இன்னும் அடங்கலும் உண்டாவதற் குக் காரணமாகிய "தாத்" தென்னும் உள்ளமையின் நுக்கத்தாவின் பக்கம் குறிப்பிடுவதாக இருக்கிறது. "நுபுவ்வத்" (தீர்க்கதரிசனத்) தின் நுணுக்கமும் அதுவே ; விலாயத் என்னும் மஃரிபத்தின் நுணுக்க கமும் அதுவே. அதிசயமாகிய ரகஸியத்தை அல்லாஹ் நுணுக்கத்தில் அமைத்துள்ளான்.

அலிப் அல்லாஹ் சே ஹோகா நஜாரா
பேகே நுக்தேமே ஹே பே(ஹ்)து ஸாரா.

(அலிப் (இன்சான்) அல்லாஹ்வின் காட்சியளிக் கும்; ரகசிய மடங்கலும் பேயின் நுக்கத்தாவில் அடங்கியுள்ளது.)

கற்பித்தார் கற்பித்தார் கசகசாவின் பிரமாணம்
கற்பித்தாரே யெனக்குக் கற்பித்தார்—கற்பித்தார்
கைச்சீட்டுந் தந்தாரே காசினி யெல்லாமாள
மைச்சீட்டுக் குள்ளே மயம்.

(காட்டானை ஷைகு ஒலியுல்லாஹ் அவர்களின் வெண்பா)

" இறைவன் உன் உயிர் நரம்பைவிட அதிகம் அணுகி இருக்க நீ உன் சிந்தனையின் அம்பைத் தூரத்தில் எய்கிருயோ ?" என்ருர்கள் மொலானு ரூமி (ரஹ்).

"பார் பார் ! (சிந்தித்துப்பார்!) இ ர ண் ட ற (பார்ப்பவனும் பார்க்கப்படுபவனும் ) கலந்து ஒன்ருய்ப் பார்!" என்பது மூத்தோர்களின் உப தேசம்.

வட்ட வடிவினில் வளைந்து வெள்ளை
வடிவுதுலங்கும் விரிவாக
மட்டிலடங்கா ஒளிவு
மகாமன் மஹமூதாகிய கண்ணுடி
விட்ட நிறச் சுருமாவதின் நீலம்
விளங்கிய வேதப் பொருளாதி
திட்டமிகுந்த அரூப சுரூப
தியானம் மறவாதே !

மூமீன் ஒருவர் தன்னுடைய முகத்தை நிலைக் கண்ணுடியில் பார்த்து வெம்பிவெம்பி அழுதவராக, இறைவனே, நீ என்னைப் படைத்ததில் உன்னுடைய நோக்கம் யாதோ?" என்று புலம்பினுர். அக் கண்ணுடியிலிருந்து, "என்னுடைய அன்பு உன் உள்ளத்தில் தரிபட்டிருப்பதே உன்னை நான் படைத்ததன் நோக்கம்" என்று சப்தம் வந்தது. இதிலுள்ள நுட்பங்கள் மெஞ்ஞான ரகசியங்கள் பொதிந்தவையாகும். இவ்விதமான ஞான ரகசிய மூல பாஷையை புத்தகங்களிலே விவரித்து எழுத (ஷரீஅத்தின்) அனுமதி

கிடையாது. ஏனென்றால், ரகசியங்களை வெளிப்படுத்துவது நீதிநெறியை நிராகரிப்பதாகும் ( குப்ராகும்). இந்த மறைவான ரகசியம் மெஞ்ஞானிகளின் உள்ளத்தில் வெளியாகும் ஹக்கீகத்தே முஹம்மதியாவாகிய இறைவனின் ரகஸியமாகும். நபிநாயகம் (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்: "சந்தேகமின்றி சில (ஞானக்) கல்விகள் மறை பொருளின் ரூபத்தில் மறைத்திருக்கின்றன. அவைகளை இறைவனைத் தெரிந்துகொண்ட ஆரிபீன்களை யன்றி (மற்றவர்கள்) அறியார். பின்னர் இக் கல்விகளை அவர்கள் வெளிப்படுத்தினால் அதனை அல்லாஹ்வைத் தெரிந்துகொள்ளாமல் பொடுபோக்காய் இருப்பவர்களையன்றி மற்றோர் நிராகரிப்பதில்லை." எனவே, நீ அடையவேண்டியவை யாவும் உன் உள்ளமையிலேயே உள்ளன. இறைவன் உன்னில் உள்ளான்; உன்னை விட்டும் நீங்கியில்லை.

ஹஜரத் ரூமி (ரஹ்) அவர்கள் ஓரிடத்தில் சொல்கிறார்கள், "பூமியிலும் வானத்திலும் நீங்கள் எவ்வளவு தேடித் திரிவீர்கள்? என் சட்டைக்குள்ளே அல்லாஹ்வைத் தவிர வேறொன்றுமில்லை" என்று.

ஆனால், இந்த ரகசிய அவசியமான விஷயங்கள் இறைவனின் உள்ளமை வர்ணனைகளுடையவும், ரசூல் (ஸல்) அவர்களுடையவும் ரகசியமாய் இருக்கின்றன. "தனஸ்ஸுலாத்" (இறங்கும் வரிசை) (இதன் விபரம் பின் வரும், இன்ஷா அல்லாஹ்) என்ற ஞான வரிசையை நன்கு விளங்காமல் இந்த ரகசியத்தின் தெளிவு பெறுவது அரிது. இந்த வரிசை விவரத்தை அறியாத சிலர் இது

மார்க்கத்துக்கு முரணுனது என்று உளறுகிறுர்கள். ஆயினும்,

مَنْ يُّرِدِ اللّٰهُ بِهٖ خَيْرًا يُّفَقِّهْهُ فِى الدِّيْنِ

"இறைவன் தான் நாடியவர்களுக்கு மார்க்கத்தில் விளக்கம் தந்தருள்கிறுன்."

**வாய் மந்திரம் சுலூக் என்னும் ஞாஞப்பியாசம் அல்ல**

சிலர் (வாயளவில்) மந்திரம் ஜபிப்பதுவே ஞான நெறிமுறை நடப்பு என்பார்கள். இது அனைத்தும் முறையாகாது. அவ்வழியில் நடந்து செல்லாதவர் பிறரை எவ்விதம் நடத்தாட்ட வியலும்? தனஸ்ஸுலாத்தின் விவரமறியாதவர் ஏழு கோணங்களின் மன்னுதி மன்னராயினும் சரி, அல்லது அற்புதம் விளைவிப்பவராயினும் சரி, கீழ் நிலையில் கிடப்பவரேயாவார்.

ஹஜரத் ஜுனைத் பக்தாதி (ரஹ்) சொல்கிறுர்கள்: "அல்லாஹுத் தஆலா இரண்டு விஷயங்களைத் தன் அடியார்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறுன். ஒன்று 'உபூதியத்' (அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு முழுதும் கீழ்ப்படிந்து அடைக்கலம் புகுந்து, தான் அல்லாஹ்வின் அடியான் என்றறிதல்); இரண்டாவது 'ருபூபியத்' (அல்லாஹுத் தஆலா சிருஷ்டிகளைப் பரிபாலிக்கும் தன்மை) என்னும் பரிபாலனையின் அறிவு. இவ்விரண்டு வகை ஞானங்களையன்றி மற்ற அறிவுகளெல்லாம் மனிதனின் நப்ஸின் இன்பத்துக்காக உள்ளவை. தான் இறைவனுல் பரிபாலிக்கப்படும்

அடியான் என்னும் தன்னிலைமையை உணர்தல், இறைவன் தன்னைப் பரிபாலிக்கும் முறையை உணர் தல் ஆகிய இவ்விரண்டுவிதக் கல்விகளைப் பெற்ற வர்களுக்குத்தான் இறைவனை அறியும் ஆசை யுண்டாகும். இவ்வாசை உடையவர்களையே மனி தர்களாகக் கருதுங்கள். ஆசை கொண்டு இறை வனை எந்த அளவுக்கு அறிவார்களோ அதற்குத் தக் கபடியே அவர்களின் மறுமை வாழ்க்கையின் நிலைமை இருக்கும்.

இவ்விடத்தில் தனஸ்ஸுலாத்தின் விவரத்தைக் கூறுவதற்கு முன் கலிமா தையிபாவின் மர்த்தபாக் களையும் விளக்க நாடுகிறேன்.

**கலிமா தையிபாவின் மகாம்களும் மர்த்தபாக்களும்**

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ

லா இலா ஹ—இல்லல்லா ஹு

لَا - اِلٰهَ - اِلَّا - اللّٰه - هُ

லா—இலா ஹ—இல்லா—அல்லா—ஹு

(1) லா. لَا

வாஜிபுல் உஜூத்: இது நாசூத் என்னும் பூத உல கத்தைக் குறிக்கும். நாசூத்தென்றால் நான்கு பூதங்க ளாகிய நெருப்பு, காற்று, மண், தண்ணீர் ஆகியவை களின் சத்தைக்கொண்டு உண்டாக்கப்பட்ட வானம்,

பூமி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியன வாகும். இதன் நப்ஸ் கெடுதல்கள் அளவிலேயே தூண்டுதல் செய்யும் "அம்மாரா"வாய் இருக்கும். இதற்கு வாஜிபுல் உஜூத் என்று பெயர். இதன் கசடுகளை விலக்குவது "திக்று ஜலி". அதாவது, 'லாஇலாஹ இல்லல்லாஹு" என்று ஷைகின் உபதேசப்படி சப்தமிட்டு திக்றுச் செய்துவருவது. இதனுடைய மகாம் (தானம்) ஷரீஅத். இதன் மர்த்தபா (பதவி) இல்முல் எக்கீன்.

## (2) இலாஹ. إِلٰهَ

மும்கினுல் உஜூத்: இது மலக்கூத்து என்னும் சூக்கும உடல். இதன் நப்ஸ் லவ்வாமா. இந்த நப்ஸின் குணம் தான் செய்த பாவங்களைக்கொண்டு வெட்கித்து தௌபாச் செய்வதும், சாலிஹீன்களின் சகவாசத்தை நாடலும், நற்செயல்கள் செய்வதில் ஆசை வைப்பதுமாம். இதற்கு கல்பே ஹக்கீகி யென்றும், மும்கினுல் உஜூத் என்றும் சொல்லப்படும். இது அழியக்கூடிய பூத உடலில் சுடர் ஒளியாய் விளங்கும் நடுப்பொருளாகிய உரைக்குள் வாளைப்போல் பொருந்தியுள்ள சூக்கும உடல். இதன் கசடுகளை விலக்குவதற்கான திக்று "திக்றே கல்பி" என்னும் கல்பைக்கொண்டு செய்யும் மௌன தியானமாகும். அதாவது, ஷைகின் உபதேசப்படி நாட்டத்தையும் அகக் கண்ணையும் நிலைநாட்டி நாவு உசும்பாமல் கல்பினுல் 'லாஇலாஹ இல்லல்லாஹு' என்று திக்றுச் செய்வது. இதன் மகாம் தரீகத்; பதவி ஐனுல் எக்கீன். மும்கினுல்

உஜுூத் என்னும் இந்தச் சூக்கும உடலைக்கொண்டே வாஜிபுல் உஜுூத் என்னும் பூத உடலுக்கு அசைவும், கார்மானமும் உண்டு. ஸ்தூல தேகம் அனைத்தும் சூரியனைக் கண்ட பனிப்போல் விலகி உனக்குப் போதை ஏற்பட்டு மெய் மறந்தால் மலக்கூத்தென்னும் சூக்குமநிலை பரிபூரணமாகும்.

## (3) இல்லா. إِلَّا

மும்தனி:வுல் உஜுூத்: இது ஜபரூத் என்னும் ஆத்மீக உடலைக் குறிக்கும். இதன் நப்ஸ் பரம விஸ்வாச தியானத்தில் சாந்தி அடைந்து மறதி என்னும் இருள் நீங்கி நிற்கும் "முத்மஇன்னு"வாய் இருக்கும். இதன் திக்று ஆத்மாவைக்கொண்டதாய் இருக்கும். ஆத்மாவின் திக்று முஷாஹிதா வென்னும், தான் தானுய் எழுந்து நின்று எல்லாப் படைக் கோலங்களிலும் ஒரே மயமான பொருளாக நின்று ஆடும் "ஜமாலே இலாஹி"யைத் திரையின்றி தரிசிப்பதாய் இருக்கும்.

يَا أَيَّتُهَا النَّفْسُ الْمُطْمَئِنَّةُ ۝ ارْجِعِي إِلَىٰ رَبِّكِ رَاضِيَةً مَّرْضِيَّةً ۝ فَادْخُلِي فِي عِبَادِي ۝ وَادْخُلِي جَنَّتِي ۝

"சாந்தியடைந்த ஆத்மாவே, உன்னுடைய ரப்பிடம் நீ அவனோடு திருப்தியடைந்தவனாகவும்,

அவன் உன்னோடு திருப்தியடைந்தவனாகவும் மீளு வாயாக! ஆதலின், என்னுடைய அடியார்களுள் நீ சேர்ந்துகொள்! மேலும், என்னுடைய சுவர்க்கத் துக்குள் புகுந்துகொள்."

இதன் மகாம் ஹக்கீகத் என்னும் அகமியம். பதவி ஹக்குல் எக்கீன். இவ்வுடல் மேல்குறித்த நாசூத், மலக்கூத்து என்னும் இரு உடலுக்கும் உயி ராய் இருக்கும்; சதாவும் அவ்விரண்டையும் பார்த்த வண்ணமாய் இருக்கும். இதன் தானம் மூன்றும் தானமாகிய ஜபரூத். இந்நிலையில் உன்னு டைய உள்ளும் புறமும் ஒன்றாகிய நான் - நீ என்ற உள்ளமை அழிந்து போனால் நீ ஜபரூத்தை அடைந்துவிட்டாய் என்று அறிந்துகொள்.

## (4) அல்லா. ﷲ

ஆரிபுல் உஜூத்: இது லாஹூத்தென்னும் தெய்வீக ஞானம் நிறைந்த அரூப சரீரமாய் இருக் கும். இதன் நப்ஸ் மெஞ்ஞானப் பிரகாச மயம் என்னும் இல்ஹாமைப் பெற்றுக்கொள்ளக் கூடிய "முல்ஹிமா"வாய் இருக்கும். இதன் திக்று "சிர்ரீ" என்னும் பரம ரகஸிய திக்ருய் இருக்கும். அதா வது, மஆஇனு வென்னும் பரப்பிரசன்ன ஜோதி உபமானமின்றியும், திக்குத் திசையின்றியும் அடியார்கள் அகத்தில் ஜொலித்து உணரப்படுவ தாய் இருக்கும். இது ஜபரூத்தின் உள்ளமை; நாசூத்து-மலக்கூத்து-ஜபரூத்து- இம் மூன்றையும் பார்க்கக் கூடியது. இது ஹக்கீகத்தே முஹம்மதியா-ஆரிபுல் உஜூத்-ஷாஹிதில் உஜூத்-பர்ஜக்கே

குப்ரா - நூரே முஹம்மதியா - தய்யூனே அவ்வல் (முதல் குறிப்பு)-வஹதத்து என்னும் பெயர்களைக் கொண்டு அழைக்கப்படும். இது கடைசியாகிய மஃரிபத் தென்னும் மகாம். இதன் பதவி கமாலுல் எக்கீன்.

## (5) ஹூ. ۿ

**வாஹிதுல் உஜூத் :** இது ஹாஹூத்தென்னும் தாத்தே அஹதியத்துடைய ஓர்மை மர்த்த பாவாய் இருக்கும். இதன் நப்ஸ், நப்ஸ் இல்லாமை. இதன் திக்று பரம ரகசியமான திக்ருய் இருக்கும். இது எல்லா திக்றுகளிலும் சிறந்தது. பரம ரகசிய திக்று என்பது பரவசத்தில் பரவசமாகி உள்ளமை நீங்கி இல்லாமையில் இல்லாமையாகிவிடுவது. ஹஜரத் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) சொல்கிறூர்கள், "திக்றிலே திக்று செய்வோன் மறைந்துவிடுவதே திக்ருய் இருக்கும்" என்று.

**கலிமாவில் பனுவாகுவதன் பொருள்:**

நாசூத்து மலக்கூத்திலும், மலக்கூத்து ஜபரூத் திலும், ஜபரூத் லாஹூத்திலும், லாஹூத் ஹாஹூத் திலும் முறையே மறைந்துவிடுவதே கலிமாவின் பனுவென்னும் இல்லாமையாய் இருக்கும். கலிமா தையிபா வென்னும் அத்வைத மூலமொழியின் அகமியப் பொருளும் இதுவேயாகும்.

. வாஜிபுல் உஜூதாகிய ஸ்தூல சரீரத்தில் மும்கி னுல் உஜூதென்றும் சூக்கும சரீரம் வெளித் தோன் றுவது போல் மும்தனிஃ என்னும் ஆத்மீக உடல்

சூக்கும உடலில் தோன்றுகிறது. சூக்குமத்தில் ஆத்மீகம் வெளியாவது போலவே தெய்வீக ஞான ஒளி நிறைந்த அரூப சரீரம் ஆத்மீகத்தில் ஜொலிக்கிறது. இது நப்ஸே முத்லக் என்றும், ரூஹே இன்சானி என்றும், புத்தி (அக்லெ-குல்) என்றும் சொல்லப்படும்.

மும்தனிஃ என்னும் ஆத்மீகத்தில் "ஆரிப்" என்னும் சுடர் ஜொலிப்பதுபோல், ஆரிப் என்னும் சுடரிலே ஷாஹித் என்னும் பரஞ்ஜோதி வெளிப்பட்டு நிறம்பி நிற்கிறது. இதுவே "நூரே அஹ்மதி" என்று சொல்லப்படுகிறது. இதைத் தெளிந்து அறியவில்லையானல் எங்ஙனம் நீ பின்பற்றுதலை விட்டு மூமினாக முடியும்!

## தஜல்லியின் பாகுபாடுகளும் அதன் வர்ணங்களும்

நப்ஸின் தஜல்லியின் வர்ணம் சாம்பல் நிறம், அல்லது கருப்பு. இது இடக்கைப் புறமாக வெளிப்படும். இந்தச் சுடர் முதுகின் புறமாக மஞ்சள் நிறமாக வெளிப்படுமாயின் அது சந்தேகமின்றி ஷைத்தானய் இருக்கும். வலக்கை புறமாகச் செந்நிறம் அல்லது பசுமை நிறமாக வெளியானல் அது முர்ஷிதின் (ஞானசிரியரின்) ஒளியாய் இருக்கும். முன்னிலையில் வெண்மை நிறமாய் ஜொலித்தால் அது ஆத்மாவின் ஜோதி, வர்ணமற்றதானல் ரஹ்மானியத்தான பரஞ்ஜோதி என்றறிக!

## கலிமா தையிபாவின் ஆறு நிலைகள்

அல்லாஹுத் தஆலா திருவுளமாகிருன்

إِنَّ رَبَّكُمُ اللّٰهُ الَّذِي خَلَقَ السَّمٰوٰتِ وَالْأَرْضَ فِي سِتَّةِ أَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ

"சந்தேகமின்றி, உம்முடைய ரப்பு வானங்களையும் பூமியையும், ஆறு தினங்களில் (இன்சானின் மர்த் தபா) படைத்துப் பின்னர் அர்ஷின் (அகமியக் கல் பின்) பேரில் (தான் நாடியபடி) தரிபட்ட அல்லாஹ் ஆவான்." [குர்ஆன்]

إِنَّ فِي جَسَدِ ابْنِ آدَمَ لَمُضْغَةً وَفِي الْمُضْغَةِ قَلْبٌ وَفِي الْقَلْبِ رُوحٌ وَفِي الرُّوحِ نُورٌ وَفِي النُّورِ سِرٌّ وَفِي السِّرِّ أَنَا

(திட்டமாக, ஆதமுடைய மக்களின் சரீரத் திலே ஒரு மாமிசத் துண்டு இருக்கிறது. அதிலே 'கல்பு' இருக்கிறது. கல்பிலே 'ருஹு' இருக்கிறது. ருஹிலே 'நூர்' (ஜோதி) இருக்கிறது. நூரிலே 'சிர்ரு' (ரகஸியம்) இருக்கிறது. சிர்ரிலே நான் இருக்கிறேன்" என்று அல்லாஹுத் தஆலா ஹதீதே குத்ஸியில் திருவுளமாகிருன்.

وَفِيٓ أَنفُسِكُمْ أَفَلَا تُبْصِرُونَ

"நான் உங்களின் நப்ஸ்களிலே இருக்கிறேன். என்ன, நீங்கள் பார்க்கிறீர்களில்லையா?" என்ற குர்ஆன் ஆயத்தும் இதையே அறிவிப்பதாய் இருக்கிறது.

مَنْ عَرَفَ نَفْسَهُ فَقَدْ عَرَفَ رَبَّهُ

("தன் நப்சை அறிந்தவன் தன் றப்பை அறிந்தான்")

மஹ்லியத்தான தாத்துல் கிப்ரியாவில்
மறைந்த கன்சுல் மக்பியாம்
மஸ்கூத்து அன்ஹுல் கதீமுல் அமாவான
மவ்ஜூதெனும் சிருபுலே
அஹதியத்துஹதாகி வாஹிதிய்யத்தான
ஆலம் அறுவாகானதில்
ஆலம் மிதாலாகி ஆலம் அஜிசாமான
ஆலம் இன்சானனபின்
பகுதிய்யத்தில்லா ஜலாலொடு ஜமாலும்
பதீஉல் காமாலுமாகி
பஃது கபுலற்ற லாஹூத்து ஜபரூபத்தில்
பகாவான ஹூவியத்தினல்
நகுஸியத்தற்று முற்ருளினிழல் பெற்றடிமை
நானினைவு மற்றுய்வனே,
நற் குணம் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முஹிய்யித்தீனே!

என்று மஸ்தான் சாஹிபு அப்பா அவர்கள் மேல் குறித்த ஆறு மர்த்தபாக்களின் விளக்கம் அடங்கிய செய்யுளைப் பாடியுள்ளார்கள்.

மௌலானு ரூமி (ரஹ்), இமாம் கஸ் ஸாலி (ரஹ்) போன்ற மகான்களும் இதைத் தழு வியே மிகத் தெளிவாய்க் கூறியுள்ளார்கள்.

தூய்மையும் பூர்வீகமும்

| (1) | (2) | (3) |
|---|---|---|
| அஹதிய்யத்து | வஹதத்து | வாஹிதிய்யத்து |
| தாத்து | நூர் | சிர்ரு |

இம்மூன்றும் பூர்வீகமாகிய, குறிப்புகளை விட்டும் தூய்மையானவை.

| (4) | (5) | (6) |
|---|---|---|
| அர்வாஹ் | அம்தால் | அஜ்சாம் |
| ரூஹு | கல்பு | ஸ்தூலம் |

இம்மூன்றும் குறிப்புள்ளவையாயும், புதிதான வையாயும் உள்ளமையற்றவையாயுமிருக்கும்.

மேல் மூன்றும் ரப்பைச் சேர்ந்தவை (ரப்பாக இருக்கும்). பின் கூறிய மூன்றும் படைக்கப்பட் டவை. இவை அப்துடைய மர்த்தபாக்களாய் இருக்கும்.

4, 5, 6 ஆகிய மூன்றும் முறையே 1, 2, 3 ன் பிரதிபிம்பங்களாகும்.

**இன்சான்**

மேல் குறித்த ஆறு மர்த்தபாக்களின் சேர்மான மாகிய ஏழாம் மர்த்தபாவே இன்சான்.

اَلْاِنْسَانُ سِرِّيْ وَاَنَا سِرُّهٗ (حَدِيْث قُدْسِي)

"இன்சான் என்னுடைய ரகசியம்; நான் இன்சானின் ரகசியம்"

என்று ஹதீதே குத்ஸியில் அருளப்பட்டுள்ளது.

1. அஹதிய்யத்தின் பயான்

நீ நாடுவாயாகில் ஞானச் சுடர் உனக்குக் கிட்டும். முன் கூறிய மூன்று மர்த்தபாக்களும் ஹக்குடைய மர்த்தபாக்களாய் இருக்கும் என்று உணர்ந்துகொள்!

குறிப்பும், பேரும், பிரிவும் அற்ற, ஆராய்ச்சி யைக்கொண்டு அறியப்படாத, 'நீ' என்றும் 'அவன்' என்றும் "அஹத்" என்றும், "சமத்" என்றும் சொல் லொணுத, அது இன்னதுதான் என்று அறிந்து

கொள்ள முடியாத, தான் தானுகிய அஹதிய்யத் தென்னும் சூஸ்திரமாய் இருக்கும். தாத்து தன்னை மறந்த நிலையாய் இருக்கும். இது ஹக்குடைய உள் ளமை. இதற்கு 'கன்ஜுல் மக்பி' என்று பெயர்.

2. வஹ்தத்தின் பயான்

இது தாத்தின் உணர்வு நிலை. அஹதியத்துக் கப்பால் உள்ளது வஹ்தத்தென்ற முதல் குறிப்பு என்று உணர்ந்துகொள். இதிலே சகல அகமியங்க ளும் வெளியாயின; தன்னைத் தான் அறியும் உணர்வு உண்டாயிற்று; தானே ஆதி என்றும் அந்தமென்றும் ரகசியமென்றும், பராசியமென்றும் கூறப்பட்ட தெளிவு உண்டாயிற்று. இந்த நிலை மர்த்தபத்துல் ஹக்கீகத்துல் முஹம்மதியா என்றும், ஹக்கீகத்துல் ஹக்காயிக் என்றும் கூறப்படும். இது முஹம்மது (ஸல்) அவர்களின் உள்ளமையாய் இருக்கும். இன் னும், இந்த மர்த்தபாவில் ஆண்டவன் முதலாவதாக நிர்மாணித்தது அந்த முஹம்மதியாவாகிய நூரே. "அல்லாஹுத் தஆலா படைத்ததில் முந்தினது என் ஒளியே" என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூறி யுள்ளார்கள். வித்தில் மரம் அடங்கி இருப்பதுபோல் சகல படைப்புக்களும் இந்த மர்த்தபாவில் அடங்கி யுள்ளன.

3. வாஹிதிய்யத்து

இது அஹதியத் என்னும் குறிப்பற்ற தாத் தின் இரண்டாங் குறிப்பு, மூன்றும் மர்த்தபா என்று உணர்ந்துகொள்! முன்பு மொத்தப் பொருளாயும் மறை பொருளாயும் இருந்தவை இந்த மர்த்தபாவில்

விபரமுள்ள விரிப் பொருள்களாய் வெளியாயின. இந்த மூன்று மர்த்தபாக்களும் சொல்லளவில் மூன்ருய் இருப்பினும் உண்மையில் ஒன்றென்றே உணர்க. இம்மூன்று மர்த்தபாக்களும் முச்சுடர் என்று கூறப்படும். இது ஆதமுடைய உள்ளமையாய் இருக்கும். இதற்கு மர்த்தபத்துல் வாஹிதிய்யா என்றும், ஹக்கீகத்துல் இன்சானியா என்றும் சொல்லப்படும். இந்த மர்த்தபாவில்தான் தாத்து தன்னுடைய வல்லமையையும் தத்துவத்தையும் உணர்ந்து சிருஷ்டிக்கும் நாட்டம் உண்டானதாக "குன்" என்ற கட்டளையை வெளியாக்கிற்று. இம்மூன்று மர்த்தபாக்களும் ரப்பைச் சேர்ந்தவை. (ரப்பாய் இருக்கும்.) இது பூர்வீகம், அனுதி. இதற்கு வரையரை கிடையாது.

இவ்விடத்தில், "வஹதத் பில் கஸரத்"- "கஸரத் பில் வஹதத்" என்பதன் விவரங் கூறுவது அவசியமாகும். வஹதத் பில் கஸரத் என்னும் பலவில் ஒன்று என்பது ஊண், குடிப்பு, நடை, இருப்பு எல்லா ஹாலிலும் கல்பைப் பலவாருன ஊசாட்டங்களற்று ஒரே நிலையில் நாட்டம் என்னும் ஆசையில் மூழ்கி இருக்கும் நிலை. இதுவே களரியிலே தனிமை என்று சொல்லப்படும்.

**எல்லாருங் கூடி இருக்கும் களரியிலே**
**வல்லானைக் கண்டு மகிழ்திருப்ப தென்ருளோ?**

கஸரத் பில் வஹதத் என்னும் ஒன்றில் பல ஆவது மேற்கூரிய ஓர்மையில் நிலைத்திருப்பதுடன், பலவின் அந்தஸ்துகளுக்கு ஏற்ற தன்மைகளுக்கு மதிப்பளிப்பது. இதனை "பனு" வென்னும்

இல்லாமைக்குப்பின் "பகா" வென்னும் உள்ளமை நிலையை எத்திக்கொண்ட "லாஇலாஹ இல்லல் லாஹு" என்ற முதல் மர்த்தபாவும், "முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்ற இரண்டாம் மர்த்தபாவும் சேர் மானமாகிய ஏக உள்ளமையில் பனுவாகித் தெளிவு பெற்ற ஸஹ்வு நிலை என்று தெளிவுற்ற பாரவான்கள் உணர்த்தியுள்ளார்கள். உண்மையில் இவ்விரண்டு மர்த்தபாக்களும் ஒன்றில் ஒன்று நிலைபட்டவையாய் இருக்கும்.

4. ரூஹின் மர்த்தபா

திட்டமாக கல்குகளில் (சிருஷ்டிகளில்) மூன்று மர்த்தபாக்களுண்டு. அவைகளில் முதலாவது, தூய்மையானதும், பரிசுத்தமானதும், லத்தீபுமான ஆத்மாவாய் இருக்கும். இந்த மர்த்தபா ஆலமெ அர்வாஹ் (ஆத்மாக்களின் லோகம்) என்று சொல்லப்படும்.

5. சூக்குமத்தின் மர்த்தபா

இது கல்குகளின் மர்த்தபாவில் இரண்டாம் மர்த்தபா. இது "மிதால்" என்றும், "பர்ஜக்" என்றும், 'நினைவு' என்றும் சொல்லப்படும். இது உடையவும் உடைக்கப்படவும், மரிக்கவும் மரிக்கப் படவும் கூடாததாகும். இந்தப் பர்ஜக் கட்டுப்பட்ட தென்றும் கட்டுப்படாததென்றும் இரண்டு வகைப் படும். மனிதனின் நினைவு எத்திக்கொள்ளக்கூடிய எல்லையைக் கட்டுப்பட்டதென்றும், அதற்கு வெளி யானதை கட்டுப்படாத தென்றும் அறிவீர்களாக! இதில் ஸ்தூல உலகத்திலேயுள்ள உருவங்களின்

மா தி ரி க ள் (நமூனுக்கள்) பொதிந்துள்ளன. அவை அல்லாஹுத் தஆலாவின் இல்மில் அடங்கிய உருவங்களின் முந்தின மாதிரி உருவங்களாம். ஆனதால், இதற்கு ஆலமெ மிதால் என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. ஸ்தூல உலகத்தில் எந்த ஒரு சிருஷ்டியும் இருக்கவேண்டுமானுல் அதற்குரிய சம நிகரான மாதிரி ரூபம் (நமூனு) இல்லாமலிருக்க முடியாதல்லவா !

### 6. பூதியத்தின் மர்த்தபா

கல்குகளின் மூன்ரும் மர்த்தபாவாகிய இது 'அஜ்சாம்' என்று சொல்லப்படும். இது மேல் லோக ஆகாயமாகிய அர்ஷெ ஆஸம் முதல் தஹ்துஸ் ஸரா வென்னும் பாதாளலோகம் வரையிலாயிருக்கும். முன் ஒளிமயமாய் இருந்தவை அனைத்தும் இம்மர்த்தபாவில் இருளடைந்த பூதியங்களாயின. மறைவாய் உள்ள ரகசியங்களெல்லாம் இங்கு பூத உடையில் தொட்டறியப்படுபவைகளாய் (வஸ்துக்களாய்) வெளியாயின. இவை ஸ்தூல அணுக்களால் சேர்க்கப்பட்ட சிருஷ்டிப் பொருள்களாகும். அல்லாஹுத் தஆலா சூக்கும சரீரத்திலிருந்து நான்கு பூதங்களையும் உண்டாக்கி அவைகளின் சத்தைக் கொண்டு பூதிய உலகத்தை உண்டாக்கினுன்.

### 7. இன்சான் (மனிதன்) ஆண்டவனின் ரகஸியமாய் இருக்கிருன்

முடிவாக அல்லாஹுத் தஆலா சூக்கும சரீரத்திலிருந்து உண்டாக்கிய பௌதீக உலகத்திலே மனு ஜடலத்தை ஏற்படுத்தி அதில் ரூஹ் என்னும்

ஆத்மாவைப் புகுத்தி வைத்தான். இந்த மனு உட லில் சூட்சும சரீரமும், அதிலே அஹதிய்யத்-வஹதத்-வாஹிதிய்யத் - ஆலமெ அர்வாஹ் அனைத் தும் அமைந்திருக்கின்றன. இதற்காகவே, "ஆதமில் (மனிதனில்) என்னுடைய ரூஹை ஊதி னேன்" என்று அல்லாஹுத் தஆலா திருவுளமாகி ருன். மலக்குகளை ஆதமுக்கு ஸஜ்தா செய்யும்படி கட்டளையிடப்பட்டதும் இதற்காகத்தான். இன் சானே, ஆண்டவனின் ரகசிய வெளிப்பாடாக ஹக்குடைய சூரத்தில் வெளிப்பட்ட மக்லூக்காய் (சிருஷ்டி) இருக்கிருன். தானே மோகிப்ப வனும் - மோகிக்கப்பட்டவனுமாய் இருக்கி ருன். அவனின் வெளிரங்கம் அப்தும், அந்தரங்கம் ஹக்குமாய் இருக்கும் என்று ஒப்புக்கொள். "நானில்லை, அவனைத் தவிர; அவனில்லை என்னைத் தவிர" என்று நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் திருவுளமாய் இருக்கிருர்கள். ஆலங்கள் என்னும் உடலுக்கு இன்சான் உயிராய் இருக்கிருன். ஹக்குடைய கலீபா வென்னும் மாபெரும் சங்கை யுடையான் இவனே. இதுவே ஆண்டவனின் ரகசியமாகும். மேற்கொண்டு சொல்வதற்கு இட மில்லை.

### ஏற்றமும் இறக்கமும்

நுஜூல் என்னும் இறக்கமாவது வஹதத்து டைய மர்த்தபாவிலிருந்து ஆத்ம உலகில் ஆத்ம உடல் எடுத்து, அதிலிருந்து சூக்கும உலகத்தில் சூக்கும உடலெடுத்துப் பின்னர் பூத உடல் கொள் ளுதலாம்.

உரூஜ் என்னும் ஏற்றமாவது பூதியத்திலிருந்து சூக்குமத்துக்கும், அதிலிருந்து ஆத்மாவுக்கும், ஆத்ம நாமங்களுடன் சேர்ந்து வாஹிதிய்யத்தில் மறைந்து மாய்வது. இந்த இறக்கத்தையும் ஏற்றத்தையும் பூர்த்தியாக்கியவனே இன்சான் காமில்-சம்பூரணமான மனிதன்-ஆவான். இதுவே கலிமாவில் உலாவுதல் ஆகும். அல்லாஹ் அளவில் முடுகுதல், அல்லா(ஹ்)வில் உலாவுதல் என்பதன் விபரமும் கருத்தும் இதுவேயாகும்.

உள்ளமை அதுவேதான் என்று விளக்கம் பெற்ருல் முதல் படியைக் கடந்தாய். அல்லா(ஹ்)வில் உலாவுதல் என்பது நாமங்களின் வெளிப்பாடு. இவை எல்லையற்றவை. இவ்வுலாவுதலுக்கு எல்லை கிடையாதெனக் காமிலான ஆரிபீன்கள் கூறியுள்ளார்கள். ஹக்கில் கலந்து நிற்கும் வாஸிலீன்கள் இவ்வுலாவுதலிலேயே நிலைபெற்றிருக்கிருர்கள்.

**தனஸ்ஸுலாத்தின் (இறங்கும் வரிசையின்) விபரம்**

ஒரு வஸ்து தன் உண்மையான உள்ளமையில் அதன் தத்துவம், குணம், லட்சணங்களுடன் நிலைத்திருப்பதுடன், இன்னெரு அந்தஸ்தில் இறங்கி வெளிப்படுதல் தனஸ்ஸுலாத் எனப்படும். இந்த இன்னெரு அந்தஸ்து வெளிப்படுவதனுல் தன் முந்திய உள்ளமையின் நிலையில் ஒரு குறையோ மாறுதலோ ஏற்படாமலும் தன் உண்மை உள்ளமைக்குத் தடையாகாமலும் நிலைத்திருப்பது.

كُنْتُ كَنْزًا مَخْفِيًّا فَأَحْبَبْتُ أَنْ أُعْرَفَ

فَخَلَقْتُ الْخَلْقَ لِأُعْرَفَ

" நான் மறைந்த பொக்கிஷமாய் இருந்தேன். நான் அறியப்படுவதை நாடினேன். ஆனதால் படைப்புகளைச் சிருஷ்டித்தேன், அறியப்படுவதற்காக" என்று அல்லாஹுத் தஆலா ஹதீதே குத்ஸியில் திருவுளமாகிருன்.

முதற் குறிப்பு ஹக்கீகத்தே முஹம்மதியா

இறைவனின் அனாதி நாட்டத்தின் அகமியத்தை நம் அறிவைக் கொண்டோ, சிந்தனையைக் கொண்டோ எத்திக்கொள்ள இயலாது. இது நம்முடைய நாட்டத்தைப் போன்றதென்று சொல்லவும் இயலாது. ஏனெனில், நம் நாட்டம் புதிதாய் உண்டானது; அதுவோ, (இறைவன் நாட்டம்) பூர்வீகமானது. தான் அறியப்படுவதற்காகப் படைப்புகளைச் சிருஷ்டிக்க நாடியபோது அல்லாஹ் முதலாவதாகத் தன்பேரில் தானே ஒரு வெளிப்பாட்டை (விபரமில்லாத மொத்தமான வெளிப்பாடு என்னும் தஜல்லி) வெளியாக்கினுன். இது "முதல் குறிப்பு"—"முதல் வெளிப்பாடு"— " இரண்டாம் அந்தஸ்து "—ஹக்கீகத்தே முஹம்மதி — "வஹதத்து" — ,"பர்ஜகே குப்ரா" என்று சொல்லப்படும். இது தெளிவின் வெளிப்பாடு. (புற வெளிப்பாடு அல்ல.)

## இரண்டாம் குறிப்பு ஹக்கீகத்தே இன்ஸானியா

பின்னர் இறைவன் தன்மீது இன்னொரு வெளிப்பாட்டை விபரமாக வெளிப்படுத்தினுன் இதில் சிருஷ்டிகள் ஒவ்வொன்றினதும் தனி விபரப் பாகுபாடும் உண்டாயிற்று. ஒவ்வொன்றும் தன் தன் தத்துவத் திறமையுடன் நிலைத்து நின்றது. இதற்கு "இரண்டாங் குறிப்பு"—"மூன்ரும் அந் தஸ்து"-"ஹக்கீகத்தே இன்சானியா"-வாஹிதிய் யத்து என்னும் பெயர்களுண்டு. இவ்விரண்டு வெளிப்பாடுகளும் இறைவனின் உள்ளமை யிலேயே வெளிப்பட்டவை ; அப்புறப்பட்டு வெளி யானவையல்ல. இவைகளில், 'முந்தியது-பிந்தி யது' என்றதெல்லாம் தெளிவை ஒட்டியதே யன்றி காலத்தை ஒட்டியதல்ல. ஏனெனில், இறை வன் உள்ளமையில் கால செல்மானமில்லை. ஆன தால் இவ்வந்தஸ்துகளுக்கு "மராதிபே உஜூபி" (உள் அந்தஸ்துகள்) என்று பெயர் சொல்வார்கள்.

## ஆலமெ அர்வாஹ்

பின் மூன்ருவதாக ஒரு வெளிப்பாட்டை வெளி யாக்கினுன். அதிலிருந்து ஆலமெ அர்வாஹ் என் னும் ஆத்ம உலகம் வெளிப்பட்டது. இது கூட்டுக் கலப்பற்ற தனிமையானது ; தாத்தின்மீதும் சூக்குமத்தின்மீதும் வெளியாகிறது. இங்கி ருந்தே பிரபஞ்ச வெளிப்பாடுகளின் வரிசை ஆரம் பிக்கிறது. அதாவது, ஹக்கின் ஜோதி ஆத்மீகத் தன்மையுடன் சேர்ந்து ஆத்ம உலகின் வடிவில் வெளியாயிற்று. இந்த முதல் புற வெளிப்பாடு

"ஜுஹுரே அவ்வல்"-"முதல் தோற்றம்"-"நான் காம் அந்தஸ்து"-"மூன்ரும் வெளிப்பாடு"-"மூன் ரும் குறிப்பு" என்றும் சொல்லப்படும்.

ஆலமெ மிதால்

பின்னர் ஒரு வெளிப்பாட்டை வெளியாக்கி ஞன். இதிலிருந்து சூக்கும உலகம் தோன்றிற்று. அதாவது, உடைதல், கிழிதல், சேர்தல் என்ற சுபா வங்களுக்கு இடமில்லாத சூக்குமப் பொருள்கள் தோற்றமாயின. இதனை "இரண்டாம் தோற்றம்"-"ஐந்தாம் அந்தஸ்து"-"நான்காம் வெளிப்பாடு"-"நான்காம் குறிப்பு" என்கிறோம். இதுவும் ஹக்கின் ஜோதியே. முன் ஹக்கீகத்தே இன்சானிய்யா வென்னும் இரண்டாம் வெளிப்பாட்டில் நிலைத்து நின்ற தத்துவத் தன்மையுடன் சேர்ந்து இது சூக்கும உலகின் வடிவில் தோன்றிற்று.

ஆலமெ அஜ்சாம்

பின்னர் இறைவன் இன்னொரு வெளிப் பாட்டை வெளியாக்கினுன். இதிலிருந்து பூத உல கம் தோன்றிற்று. அதாவது, உடைதல், கிழிதல், சேர்தல் முதலிய சுபாவங்களையுடைய பஞ்ச பூதப் பொருள்கள் உண்டாயின. இது "மூன்ரும் தோற் றம்"-"ஆரும் அந்தஸ்து"-"ஐந்தாம் வெளிப்பாடு" என்று பெயர் குறிப்பிடப்படுகிறது. வானம், பூமி இன்னும் இவை இரண்டிலும் உள்ளவை அனைத் தும், இன்சானைத் தவிர, இப்பூத உலகில் சேர்ந்த வைகளாகும். இதுவும் மேல் சொல்லப்பட்ட ஹக் குடைய ஜோதியே. முன் இரண்டாம் வெளிப்பாட் டில் விபரப் பாகுபாட்டுடன் நிலைத்து நிற்கும் தத்து

இல்லாவிடினும், உயர்ந்த பண்பாட்டிலும், இன் முகம் காட்டுவதிலும் அனைவரிலும் மிகைத்தவர்களாய் இருங்கள்" என்று திருவுளமாயிருக்கிறார்கள். அவர்கள் இறைவனிடம் பிரார்த்தனை புரியும்போதெல்லாம் அநேகமாக,

اَللّٰهُمَّ اَحْسَنْتَ خَلْقِيْ حَسِّنْ خُلُقِيْ

وَاللّٰهُ يَعْصِمُكَ مِنَ النَّاسِ

"இறைவா, அழகான வதனத்துடன் என்னைப் படைத்திருக்கிறாய்; அதுபோலவே என் குண, ஒழுக்கங்களையும் அழகானவையாக ஆக்கிவைப்பாயாக!" என்றும் துஆக் கேட்பார்கள். மேலும், ஒரு ஸஹாபி, "நபியே, அடியானுக்கு (அல்லா(ஹ்)வால்) அருளப்பட்டுள்ள செல்வங்களில் மிகவும் புனிதமானது எது?" என்று அவர்களிடம் வினவியதற்கு "நற்குணங்கள்" என்று பதில் தந்துள்ளார்கள். மற்றொரு சமயம், "உயர் குணங்கள் பரிணமித்துப்புனிதமானவர்களே எனக்கு மிக மிக உவப்பானவர்களும், கியாம நாளில் அருகில் அமரும் பாக்கியம் பெற்றவர்களுமாவர்" என்று கூறியிருக்கிறார்கள். மேலும், "சூரியன் பனிக்கட்டியை உருக்கிவிடுவதே போன்று நற்குணங்கள் பாவத்தை உருக்கி (இல்லாமலாக்கி) விடுகின்றன" என்றும் திருவுளமாகியுள்ளார்கள்.

### தீய குணங்களின் தீமைகள்

நபிபெருமானிடம் ஒருவர் வந்து, "தரித்திரமும், அருளற்ற தன்மையும் யாவை?" என்று வினவிய

தற்கு அவர்கள், “தீய நடத்தைகள்” என்று கூறி விட்டுத் தொடர்ந்து, “தேனைக் காடி (ருசியற்றதாக) கெடுத்துவிடுவதே போன்று நல் அமல்களின் புனிதத் தன்மையைத் தீய செயல்கள் கெடுத்துவிடு கின்றன” என்றும், “தீய குணங்களை ஹக்குத் தஆலா மன்னிக்கவே மாட்டான்” என்றும், “தீய குணமுள்ளவன் நரகத்தின் மடியில் எறியப்படு வான்” என்றும் திருவுளமாகியுள்ளார்கள்.

யாரேனும் வியாதியுற்றிருப்பதாகத் தெரிந்தால் நபிபெருமான் தாங்களே நேரில் சென்று ஆறுதல் கூறிவருவார்கள். அடிமைகள் அளிக்கும் (தஃவத்) விருந்தையும் இன்முகங்காட்டி ஏற்றுக்கொள்வார் கள். தங்கள் செருப்புக்களைத் தாங்களே தைத்தும், துணிகளுக்கு (அவசியப்பட்டால்) ஒட்டுபோட்டுத் தைத்தும் கொள்வார்கள். மேலும் தங்களின் குடும்பத்தவர்கள் செய்யும் குடும்ப வேலைகளை அவர்களுடன் கூடிக்கொண்டு தாங்களும் செய் வார்கள். மற்றும் ஸஹாபி (தோழர்)களுக்கு எந்தக் கஷ்டத்தையும் கொடுக்காமல் தங்கள் காரி யங்களைத் தங்கள் கையாலேயே செய்து முடித்துக் கொள்வார்கள்.

யாரேனும் அவர்களை அழைத்தால் ‘லப்பைக்’ (உங்களுக்கு என் நன்றி) என்று கூறுவார்கள். ஏழைகளோடு ஏழையாய் அமருவார்கள். வறியவர் களைத் தங்களுடன் அமர்த்திக்கொண்டு உண்ணக் கொடுப்பார்கள். ஏழைகள், நோயாளிகள் என்பதற் காக யாரையும் எப்போதுமே அவர்கள் தாழ்வாக எண்ணியதே இல்லை. மன்னர்களை - அவர்கள்

எவ்வளவு வல்லமையும், கீர்த்தியுமிக்கவர்களாயினும், எக்காரணத்துக்காகவும் - கண்டு அஞ்சவே மாட்டார்கள். எவருக்கும் எப்போதுமே 'பத்துஆ' (சாபம்) கேட்டதேயில்லை. எவருக்காவது 'பத்துஆ'க் கேட்கும்படி யாரேனும் வேண்டினால் அதற்கு மாற்றமாக அவருக்கு நல்துஆச் செய்வார்கள். தாங்கள் அமருவதற்கு விரிப்பு விரிக்கப்பட்டால் அதில் அமருவார்கள். இன்றேல் தரையிலேயே அமர்ந்து கொள்வார்கள்.

மற்றவர்களுக்கு ஸலாம் கூற நபிபெருமான் தாங்களே முந்திக்கொள்வார்கள். பேச வந்தவர் போகும்வரை நபிபெருமான் நின்றுகொண்டே பேசுவார்கள். தங்களின் திருக்கரங்களை எவரேனும் (கைலாகுக்காக) பிடித்துக்கொண்டால் பிடித்தவர்களே விடும்வரை தங்களின் கையை விடுவித்துக் கொள்ள யத்தனிக்க மாட்டார்கள். அவர்கள் தொழுகையிலிருக்கும் சமயம் எவரேனும் சந்திப்பதற்கு வந்துவிட்டால் அவர்களை (அதிக நேரம்) காக்கவைக்காமல் தொழுகையைச் சீக்கிரமாக முடித்துக்கொண்டு வந்தவரைச் சந்தித்துத் தங்களால் ஆகவேண்டிய காரியம் ஏதேனுமிருப்பின் அதை முடித்துக் கொடுப்பார்கள். எங்கேனும் சபைகளில் சென்று கலந்துக்கொள்ள வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்துவிட்டால் சபைக்குச் சென்று எங்கு இடம் கிடைத்தாலும் அமர்ந்துகொள்வார்கள். தங்களிடம் வருபவர்களைக் கண்ணியமான வகையில் வரவேற்று முகமன் கூறி உபசரிப்பார்கள். நபிபெருமானின் உபசரிப்பைக் காணும் ஒவ்வொருவரும், 'நபிபெருமான் (ஸல்) அவர்கள்

நம்மைவிட வேறு யாரையும் இவ்வளவு மகத்தான முறையில் உபசரிக்கவில்லை' என்றே கருதுவார்கள். அவ்வளவு சிறப்பாக அவர்கள் அதிதிகளை உபசரிப்பார்கள்.

ஒரு குருட்டுப் பெண்

ஒருநாள் எம்பிரான் (ஸல்) அவர்கள் கடைத் தெருவில் சென்றுகொண்டிருக்கும்போது அங்கே குருட்டுப் பெண் ஒருத்தி தெருவில் தடுக்கி விழுந்து கிடந்தாள். கடைத்தெருவில் இருந்தவர்கள் அவளுக்குஎந்த உதவியையும் செய்யாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். இதைப் பார்த்த நபி பெருமான் (ஸல்) அவர்களுக்கு அழுகையே வந்து விட்டது. அவர்கள் ஓடிச் சென்று அந்தப் பெண்ணை. தூக்கி நிறுத்திக் கையைப் பிடித்து அழைத்துப் போய் அவள் இருப்பிடத்தில் சேர்த்தார்கள். மேலும், தினமும் தங்கள் வீட்டில் சமைத்த உணவை அவளுக்குக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வருவார்கள்.

ஒரு பணிமகள்

கூலிவேலை செய்யும் பெண்ணொருத்தி ஒருநாள் தன் தலையில் விறகுக் கட்டு ஒன்றைச் சுமந்துக் கொண்டு கடைவீதியில் சென்றுகொண்டிருந்ததைப் பார்த்து அங்குள்ளோர் அப்பெண்ணை வெருட்டிக் கொண்டிருந்தனர். அதைப் பார்த்த நபிபெருமான்(ஸல்) அவர்கள் கூட்டத்தினரை அணுகி, "அவளுக்கு நீங்கள் (இரக்கம் காண்பித்து) உதவி செய்யாமல் மேலும், மேலும் தொந்தரவு செய்கிறீர்களே, உங்களுக்கு மானமில்லை?" என்று கண்டித்து அறிவுறுத்தினர்கள்.

### பெண்களை அடிக்காதீர்கள்

ஒரு நாள் கடைவீதியில் ஒரு மனிதன் தன் மனைவியை அடித்துக்கொண்டிருப்பதையும், அதைக் கண்டு மற்றவர்கள் (அவனைத் தடுக்காமல்) வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பதையும் நபி பெருமான் கண்டதும் வருந்தி, “பெண்களை நீங்கள் அடிக்காதீர்கள்! மேலும், கடைவீதியில் வைத்துப் பெண்களை அவமானப்படுத்தாதீர்கள்! நீங்களெல்லாம் வீரர்கள். பெண்களை இம்சிப்பது வீரர்களுக்கு அழகல்ல” என்று இறைந்து பேசிக் கண்டித்தார்கள்.

### அடிமைகளுக்கு உதவி

நபிபெருமான்(ஸல்) அவர்கள் அடிமை ஆண், பெண்களுக்குப் பரிந்து நிறைய உபகாரம் செய்தார்கள். தங்களின் சொந்தப் பணியாளர்களைச் சொந்தக் குழந்தைகளை நடத்துவது போன்று நடத்தினார்கள். மற்ற வீட்டுப் பணியாட்களையும் அன்போடு நடத்தினார்கள். எந்த வேலைக்காரர் கஷ்டப்படுவதாகத் தெரிந்தாலும் அவருக்கு உதவி செய்ய நபி பெருமான் விரைந்து செல்வார்கள். எனவே, ஒரு நாள் ஓர் அடிமை மாவு அரைத்துக்கொண்டே அழுது கொண்டிருப்பதைப் பார்த்த நபிபெருமான் அந்த அடிமையை அணுகி விசாரித்ததில் அந்த வேலையாள் நோய்வாய்ப்பட்டிருக்கும் நிலையிலும் தன் எஜமானனின் கொடுமைக்கு அஞ்சி மாவு அறைப்பதாகக் கூறினான். இதைச் செவியேற்ற நபிபெருமான் அவனை அப்பால் நகர்த்திவிட்டு அந்த இடத்தில் தாங்களே உட்கார்ந்து அந்தத் தானியத்தை அறைத்துக் கொடுத்தார்கள். “உதவி தேவைப்ப

டும் போதெல்லாம் எனக்கு தெரிவித்துவிடு ; நான் வந்து நீ அறைக்கவேண்டிய மாவை அறைத்துத் தருகிறேன் ” என்றும் அவனிடம் ஆறுதல் கூறி ஞர்கள்.

''முஹம்மது உன்னுடனிருக்கிறுர்''

ஒரு சமயம் அபூ ஸுப்யானின் அடிமை ஒருவன் நோயுற்றுவிட்டதால் அவனை யாரும் கவனிக்காமல், சிகிச்சையும் செய்யாமல் ஒரு தனி இடத்தில் கொண்டுப் போட்டுவிட்டார்கள். அதைக் கேள்வியுற்ற நபிபெருமான்(ஸல்) அவர்கள் அன்று இரவு அந்த அடிமை சீக்காகப் படுத்திருக்கும் இடத்துக்குச் சென்று விடியும் மட்டும் அவனுக்கு சிசுருட்சை செய்து, காலையும் பிடித்துவிட்டார்கள். “ நீ அஞ்சாதே ! முஹம்மது உன்னுடனிருக்கிறுர் ” என்று அவனிடம் ஆறுதலாகத் தைரியமும் கூறிஞர்கள்.

வயோதிக வேலைக்காரனுக்கு உதவி

ஒரு சமயம் வயோதிக வேலைக்காரன் ஒருவன் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துத் தோட்டத்துக்குப் பாய்ச்சிக்கொண்டிருந்தான். தள்ளாமையால் அவனுடைய கை, கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. இதைக் கண்ட நபி பெருமான் (ஸல்) அவர்கள் அந்தக் கிணற்றடிக்குச் சென்று அவன் வைத்திருந்த குடத்தை வாங்கித் தண்ணீர் முகந்து தோட்ட முழுவதுக்கும் பாய்ச்சிவிட்டு, “எனது உதவி தேவைப்படும்போது எனக்குத் தெரிவி ; நான் வந்து உதவுகிறேன் ” என்று சொல்லிவிட்டு வந்தார்கள்.

### அடிமையின் சுமையைத் தூக்கியது

வேறொரு சமயம் ஒரு சிறுவன் தன்னால் தூக்க முடியாத சுமையைத் தன் தலையிற் சுமந்து சென்று கொண்டிருந்தான். அச்சுமையின் பளுவால் அவன் கழுத்து நெறிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. அதைக் கண்ட நபி பெருமான் அச் சிறுவனிடம் சென்று அவன் தலையிலிருந்த சுமையை வாங்கித் தங்கள் திருத்தோளின் மேல் சுமந்துகொண்டு அவன் செல்லவேண்டிய இடத்துக்குச் சென்று கொடுத்ததுடன், "குழந்தாய், உனக்குக் கஷ்டம் வந்து உதவி அவசியப்படும் போதெல்லாம் முஹம்மதை நினைத்துக் கூப்பிடு; மறக்காதே!" என்று அன்புடன் கூறிச் சென்றார்கள்.

### இரவு முழுவதும் நோயாளியுடன்

மற்றொரு சமயம் யாரோ ஒரு யூதனின் அடிமை கடுமையான நோயுற்றிருப்பதாகக் கேள்வியுற்று நபிபெருமான் அவனைப் பார்க்கச் சென்றார்கள். அது சமயம் நன்றாக இருட்டிவிட்டது. அவ்வடிமை நன்றாகப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தான். ஓர் ஆள் வந்த சந்தடியைக் கேட்டு அந்த அடிமை (நபிபெருமான் என்று தெரிந்துகொள்ளாமல்), "என் எஜமானன் எனக்குச் சிசுருட்சை செய்ய ஒரு பணியாளையும் அனுப்பி வைத்திருக்கிறாரா ?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான். (இதைக் கேட்ட) நபி பெருமான், "ஆம், நான் உனக்கு ஒத்தாசை செய்யவே அனுப்பப்பட்டு வந்துள்ளேன்" என்று கூறி அன்றிரவு முழுவதும் அந்நோயாளியுடனேயே இருந்து அவனுக்குச் சிசுருட்சை செய்து கொண்டிருந்தார்கள்.

### இரண்டு தோளிலும் சுமை

நபிபெருமானுர் தினமும் தங்கள் இரண்டு தோட்களிலும் சுமையைத் தூக்கிச் செல்வதை தின மும் மக்காவாசிகள் கண்ணுறுவார்கள். பலஹீன மான அல்லது தாமே கடைக்குச் சென்று சாமான் களை வாங்கிக்கொள்ள முடியாதவர்களுக்காகவே நபிபெருமான் அவ்விதம் அவர்களின் அன்ருடத் தேவையான சாமன்களை வாங்கிச் சுமந்து, அவரவர் களின் வீடுகளில் சென்று கொடுப்பார்கள்.

### மூன்று நாள் வரையிலும் ஒரே இடத்தில் காத்து நின்ருர்கள்

ஒரு சமயம் நபிபெருமான் (ஸல்) அவர்கள் செய்த வியாபாரம் ஒன்றில் வேருெவர் கூட்டாளியா யிருந்தார். ஒரு நாள் அம்மனிதர் நபி பெருமானை ஓர் இடத்தில் நிற்க வைத்து, " நீங்கள் இங்கே இருங்கள். நான் இதோ வந்துவிடுகிறேன்!" என்று கூறிவிட்டுப் போனுர். போனவர் அவர்களை அங்கு நிற்கச் சொன்னதை மறந்துவிட்டார். அவர் வருகையை எதிர்பார்த்து மூன்று நாள் வரைக்கும் நபிபெருமான் இரவு பகலாக அதே இடத்தில் நின்றுகொண்டிருந்தார்கள். பின்னர் நான்காம் நாள் அம்மனிதருக்கு இது நினைவுவந்து, நபிபெரு மானை நிற்கவைத்துவிட்டுப்போன இடத்துக்கு வந்து தன் மறதிக்காக மன்னிப்புக் கோரிக்கொண் டார்.

### கிழவிக்கு உதவியது

வேருெரு சமயம் நபிபெருமான் தொழுகைக் காக கஃபத்துல்லாஹ்வை நோக்கிச் சென்று

கொண்டிருந்த போது தெருவில் வயோதிக மாது ஒருத்தி அழுதுகொண்டு செல்வதைக் கண்டார்கள். அந்தத் தாயை அணுகி அவள் அழுவதற்கு காரணம் யாதென்று கேட்டார்கள். "நான் ஒரு யூதனிடம் கூலிக்கு மாவரைக்கிறேன். இன்று எனக்கு ஜுரமாகையால் சற்று நேரமாகிவிட்டது. அதனுல் அந்த யூத எஜமானன் என்னை அடிப்பான். அதற்காகவே அழுகிறேன்" என்று அப்பெண்மணி கூறினுள். இதைக் கேட்ட நபிபெருமான் "தாயே, நீங்கள் அழவேண்டாம். உங்கள் எஜமானனிடம் நானே வந்து பரிந்து பேசுகிறேன். வாருங்கள்" என்று கூறி அவளுடன் அவளுடைய எஜமானனுன யூதனிடம் சென்று, "இவ்வம்மை நோயாளியாயிருக்கிருர். மேலும், இவர் ஏழை. இவரை நீங்கள் கொடுமைப்படுத்த வேண்டாம். மேலும், இவர் ஒரு பெண். இவருக்குப் பதிலாக எனக்குத் தண்டனை கொடுத்துவிடுங்கள்" என்று கூறி சிபாரிஷ் செய்தார்கள்.

### நோயுற்ற ஒட்டகைமீதும் பரிவு

மற்ருெரு சமயம் ஒரு மனிதன் ஒட்டகம் ஒன்றை இழுத்துச் சென்ருன். அது நோயால் வருந்திக்கொண்டிருந்தது. அந்நிலையிலும் அதன் மீது அளவு கடந்த சுமையை ஏற்றியிருந்தான். அதைக் கண்ட நபிபெருமான் அவனை அணுகி, "உன்னுடைய, இந்தக் கிழ ஒட்டகம் நோயுற்று இருக்கிறதே, அதன்மீது பரிவு காட்டு !" என்றதும் அம் மனிதன், "இதைக் கவனித்து சிசுருட்சை பண்ணிக் கொண்டிருந்தால் என் குழந்தைகளை நான் எவ்வாறு பராமரிப்பது ?" என்று வினவினுன்.

### குட்டியுள்ள ஆட்டைக் காப்பாற்றினார்கள்

பிறகொரு சமயம் ஓரிடத்தில் ஒரு மனிதன் இரண்டு குட்டிகளுள்ள ஒரு பெண் ஆட்டை அறுக்க முயற்சித்துக் கொண்டிருந்தான். அந்த இரண்டு குட்டிகளும் தாயின் அருகில் நின்று பரி தாபமாக அலறிக்கொண்டிருந்தன. இதைப் பார்த்த நபிபெருமான் (ஸல்) அவர்கள் அம் மனி தனை அணுகி அந்த ஆட்டையும், அதன் இரண்டு குட்டிகளையும் விலைக்கு வாங்கிக்கொண்டு, "எப் போதுமே நீ குட்டியுள்ள ஆட்டை அறுக்காதே ! இது இறக்கமற்ற செய்கை" என்று உபதேசித்துச் சென்றார்கள்.

### சிறு பட்சிகளை வேட்டையாடுதல்

நபிபெருமான் ஒரு நாள் ஹஜரத் அபூ பக்கர் (ரலி) அவர்களிடம், "யாராவது சிறு பட்சிகளை வேட்டையாடும்போது எனக்கு மிகவும் வருத்த முண்டாகிறது. பெரிய பிராணிகளை வேட்டையாடினா லும் பலரின் பசியை ஆற்றலாம். ஆனால், சின்னஞ் சிறிய பட்சிகளை வேட்டையாடுவதால் உயிர்கள் தான் அதிகமாகச் சேதமாகிச் சொற்ப அளவு பசி யைத்தான் ஆற்றிக்கொள்ள முடியும்" என்று கூறினார்கள்.

மேலும், நபிபெருமான் (ஸல்) அவர்கள் தங்க ளின் சுயதேவைக்காக எப்போதுமே மற்றவர் களுக்கு தொந்தரவையோ சிரமத்தையோ ஒரு போதும் கொடுத்ததில்லை. ஆட்டின் பாலை கறப்ப திலிருந்து தங்கள் துணியைத் தைத்துக்கொள்ளும் பணிவரை எவரையும் ஏவாமல் தங்கள் திருக்கரங்

களாலேயே யாவையும் செய்துகொள்வார்கள். எவருக்கும் வருத்தம் வரும் வகையில் பேசவும் மாட்டார்கள். ஒழுக்கங்கெட்ட விதமாகவும் கீழ்தரமாகவும் ஒருபோதும் பேசியதில்லை. நபி பெருமானின் பெரிய விரோதியான அபூ ஜஹ்லின் மகன் ஒரு சமயம் மிகமிக மட்டரகமான வகையில் அவர்களின் திருச் சமூகத்தில் வந்து நின்ருன். அது சமயம் அவனும் அவன் அப்பன் அபூ ஜஹ்லும் முஸ்லிம் குலத்தையே சித்திரவதை செய்துக் கொண்டிருந்தார்கள் என்று தெரிந்திருந்தும் அவனைக் கண்ணியமான வகையில் மன்னித்துவிட்டார்கள்.

**வீரம் உறுதி**

நபிபெருமான் (ஸல்) அவர்கள் குண ஒழுக்கத்தில் ஒப்பற்ற வகையில் சிறந்து விளங்கியது போலவே, ஏன், அதைவிடப் பன்மடங்கு அதிகமாகவே வீரமும் உறுதியும் அவர்களின் பிறவிக் குணங்களாகச் சிரேஷ்டமாக அமைந்து பிரகாசித்தன. எனவேதான், அல்லாஹ்வால் தாங்கள் நியமிக்கப்பட்டிருந்தமா பெரும்புனிதப் பணியைச் சிறக்கச் செய்து சம்பூரணமாக்குவதில் தங்கள் ஆயுள் முழுதும் மிக மிக விறுவிறுப்புடன் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் தங்களின் திருச்சேவையை ஆற்றிக்கொண்டிருந்த காலையில் சொல்லொண்ணுக் கஷ்டங்களையும் நெருக்கடிகளையும் கொடிய விரோதங்களையும் எதிர்நோக்க வேண்டியதேற்பட்டது. ஆயினும், கடமையைவிட்டும் அவர்கள் ஒரு சிறிதும் பிசகியதே இல்லை. அல்லாஹ்வின் உள்ளன்பையும், ஏகத்துவத்தையும் மக்களிடம் கூறிப் பிரச்சாரம் புரிந்த காலத்தில் சொல்

லொணுக் கொடுமைகளை அவர்கள் சகிக்க நேரிட்டது. எல்லாச் சமூகங்களும் ஒவ்வொரு நாடும், ஊரும், ஏன், அண்டை, அயலாரும், சுற்றத்தாரும் எம்பெருமான் அவர்களைக் கொன்றுவிட எண்ணினர். ஆயினும், நபிபெருமான் அவர்களோ உறுதியுடனும், வீரத்துடனும் தம் முழு ஆத்ம பலத்தையும் கொண்டு அந்த விரோத சக்திகளை எதிர்த்து முறியடித்தார்கள்.

ஆனால், நபிபெருமான் (ஸல்) அவர்கள் காட்டிய ஆத்மீகமான வீரமும் உறுதியுமே அரபு மக்களைத் தீனுல் இஸ்லாத்துக்கு முன் பணியவைத்தவையாகும். எனவேதான், சத்திய முஸ்லிமானவன் அல்லாஹ்வின் புனிதப் பாதையில் நடக்கும்போது குறுக்கிடக்கூடிய மலை போன்ற தடைகளையும் சோதனைகளையும் கண்டு அஞ்சி நடுங்கிவிடக் கூடாது. அதற்காக மனஞ் சலித்துக் குறைகூறிக் கொண்டிருந்துவிடாமல் மகா பொறுமையுடன் அவைகளைச் சகித்துக்கொள்வது முஸ்லிம்களின் மீது மாபெரும் கடமையாகும்.

**தவக்கல் (முழு நம்பிக்கை)**

எம்பெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் சர்வ காரியங்களிலும், நடப்பது, உட்காருவது போன்ற எல்லா விஷயங்களிலும் ஹக்குத் தஆலாவின் மீதே சம்பூரண நம்பிக்கை வைத்திருந்தார்கள். சுருங்கக் கூறவேண்டுமாயின் அவர்களின் மாண்புறு வாழ்க்கையே அல்லாஹ்வின் உதவியையும் நம்பிக்கையையுமே அஸ்திவாரமாய் கொண்டு அமைந்திருந்தது. ஊண், குடிப்பு முதலிய சிறு சிறு

விஷயங்களிலும்கூட நபிபெருமான் அல்லாஹ்மீது கொண்டிருந்த சம்பூரணத் 'தவக்கலை' (நம்பிக்கை) குறித்து, "பெரும்பாலும் நபிபெருமானிடம் நாளைக்கு வேண்டிய ஒரு நாள் உணவு கூட இருக்காது" என்ற ஹதீதிலிருந்து அறிந்துகொள்ளலாம். மேலும், "நபிப் பட்டம் பெற்ற ஆரம்ப காலத்தில், நபிபெருமான் இஸ்லாத்தைப் போதித்த சமயம் குப்பார்களே அதிகமாய் இருந்தனர். அவர்கள் நபிபெருமானைக் கொன்றுவிடவே திட்டமிட்டுக் கொண்டிருந்தனர். அக்காலையில் அவர்களைப் பாதுகாப்பதற்காக அவர்களைச் சுற்றிலும் காவலும் போடவேண்டியதிருந்தது. அப்போதுதான், 'ஜனங்களின் தீங்கை விட்டும் அல்லாஹ் உங்களைக் காப்பாற்றுவான்' என்ற ஆயத்து இறங்கியது. அதன் பின்னர் நபிபெருமான் அவர்கள், 'என்னைப் பாதுகாக்கும் பொறுப்பை அல்லாஹ்வே ஏற்றுக்கொண்டு விட்டதால் இனி எனக்கு மனிதர்களின் பாதுகாப்பு அவசியமில்லை' என்று கூறிவிட்டார்கள்" என்று ஹஜரத் ஆயிஷா நாயகி தெரிவிக்கிருர்கள். ஆகவே, நபிபெருமானுக்கு அல்லாஹ்வின் மீது எவ்வளவு முழு நம்பிக்கை இருந்ததென்பதை ஒருவாறு அறிய முடிகிறதல்லவா !

ஒரு சமயம் சுராக்கா என்பவன் பேராசை, பகைமையின் காரணமாக நபிபெருமானவர்களைப் பிடித்து எதிரிகளிடம் கொடுப்பதற்காகக் குதிரைமீது ஏறித் துரத்திக்கொண்டு பின்னல் சென்ருன். அவன் துரத்திக்கொண்டு வருவதை ஹஜரத் அபூ பக்கர் (ரலி) கண்டு, "இதோ நம்மைப் பிடிக்க ஒருவன் வந்துகொண்டிருக்கிருன்" என்று கூறி எங்கே

னும் ஒளிந்துகொள்ள விரும்பினுர்கள். அவன் அருகில் நெருங்கி வரவர ஹஜரத் அபூ பக்கர் (ரலி) அச்சத்துடன் அவனை அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டே வந்தார்கள். இதை நபிபெருமான் அவர்கள் ஒரு பொருட்டாகவே மதிக்காமல் நடந்து கொண்டே செல்லவேண்டிய இடத்தைச் சென்ற டைந்துவிட்டார்கள். இது நபிபெருமானின் இறை நம்பிக்கைக்கும், சித்தசுத்திக்கும், சம்பூரண உறு திக்கும் ஒரு மாபெரும் சான்ருகும். பின்னெரு சம யம் குறைஷிகள் நபிபெருமானின் பாதத்தின் சுவட்டை அடையாளமாக வைத்துக்கொண்டு அவர்களைப் பிடித்துவிடத் தௌர் எனும் குகை வாயில் வரையும் வந்துவிட்டனர். அது சமயம் குகைக்குள்ளிருந்த ஹஜரத் அபூ பக்கர் (ரலி) குகை வாயிலில் நின்றுக்கொண்டிருக்கும் எதிரிகளின் சந்த டியைக் கேட்டுக் குழம்பிப்போய் நபிபெருமா னிடம் முறையிட்டார்கள். எதிரிகள் அருகில் வந்து விட்டபோதும், மரணமே கண்ணுக்குமுன் அண் மித்து நின்றபோதும், அவர்களின் புனித லக்ஷியங் கள் யாவுமே அத்துடன் வீணுகிவிடலாமோ என்ற நிலையிலும்கூட, “ஹே அபூ பக்கரே, கவலை ஏன்? நம்முடன் அல்லாஹ் இருக்கிருன் என்பதை நம்புங் கள்” என்று நபிபெருமான் அவர்கள் கூறினுர்கள். ஜீவனூட்டும் இந்த வார்த்தைகள் நபிபெருமானின் ஒப்பற்ற தெய்வ நம்பிக்கைக்கும், தளரா உறுதிக் கும் அழியாத சான்ருக மிளிர்கின்றனவல்லவா!

இன்றும் அம்மொழிகள் சரித்திரத்தில் பொன் மையால் பொறித்து வைக்கப்படத்தக்க வகையில் இருக்கின்றன. தெய்வ நம்பிக்கைக்கும் தூய்மைக்

கும் ஓர் அழியாச் சின்னமாகவும் இவை திகழ்கின்றன. நம்பெருமான் (ஸல்) அவர்களின் இந்த அழகிய முன்மாதிரியை முஸ்லிம்களாகிய நாம் பின்பற்றக் கடமைப்பட்டுள்ளோம்.

**வணக்கமும் தண்டிப்பும்**

நபிபெருமான் (ஸல்) அவர்களின் மெய்வணக்கத்தையும், ஹக்குத் தஆலாவின் மீது அவர்களுக்கு இருந்த சம்பூரண விஸ்வாசத்தையும் கொண்டே அவர்கள் எதற்காக அனுப்பப்பட்டுள்ளார்கள் என்பதை நாம் உணர்ந்துகொள்ளலாம். மெய்வணக்கத்தின் மூலமே சிருஷ்டிகர்த்தாவுக்கும், சிருஷ்டிகளுக்கும்-ஆண்டவனுக்கும், அடிமைக்கும் உள்ள பிணைப்பு பரிபூரணமாக உறுதிப்படுகிறது. மெய் வணக்கத்தைச் சம்பூரணமாக நிறைவேற்றுபவன் தன்னைத் தன் ரக்ஷகனோடு ஆத்மீகமாகப் பிணைத்துக்கொள்வதை உணர்கிறான். மேலும், மெய் வணக்கமென்பது ஒரு விதையைப் போன்றது. விதையைப் பூமியில் ஊன்றினால் பூமிக்கு மேல் முளை விடுவது போன்றே கலப்பற்ற நல்வணக்கத்தின் உணர்வும் புனித அடியார்களின் உடலிலும் ஆத்மாவிலும் பாய்கிறது. நாம் நல்வணக்கத்தைத் தூய்மையாக அனுஷ்டிக்கும் அளவுக்கு அதன் புனித உணர்வு பூத்துக் காய்த்துப் பயனளிக்கிறது.

மனிதன் தன் நல்வணக்கத்தின் மூலமாகவும் சன்மார்க்க நெறி முறைகளைப் புனிதமாக நிறைவேற்றுவதன் வாயிலாகவும் தனது பணிவை நிருபிக்காதவரை-அவன் இறைவன் மீது கொள்ளும் சத்திய விசுவாசத்தில் சம்பூரணமானவனாகாதவரை அவனுக்கு அல்லாஹ்வின் அருளும், கடாக்ஷமும்

அநுக்கிரஹிக்கப்படவே மாட்டாது. நபிபெருமான் (ஸல்) அவர்கள் எந்த வேலையும் செய்யாமல் தொழுகையிலும், அல்லாஹ்வின் திக்றிலுமேதான் மூழ்கி விட்டிருந்தார்கள்போலும் என்று எவரேனும் துணிந்து கூறமுடியுமா? அவ்வாறு கூறவே முடியாது. நபிபெருமான் தங்களின் வாழ்நாளின் ஒவ்வொரு மூச்சையும் சர்வ காரியங்களிலும், அல்லாஹ்வின் தியானத்திலும், அவனை நினைப்பதிலுமே கழித்து வந்துள்ளார்கள். அவர்கள் உடை உடுப்பதும் அல்லாஹ்வின் வணக்கமாகவே இருந்தது. பிராட்டிமார்களுடன் அவர்கள் தினசரி கூடிப் பழகியதும்கூட ஒரு மெய்வணக்கமாகவே செய்யப்பட்டது. விருந்தினர்களை அவர்கள் இன்முகம் காட்டி அவர்களுடன் பழகியதிலும், உபசரிப்பதிலும்கூட ஹக்குத் தஆலாவின் பயபக்தியே ஊடாடிற்று. ஆகவே, சுருங்கக் கூறவேண்டுமாயின் நபிபெருமானின் சர்வ காரியங்களும், ஒவ்வொரு செயலும் அல்லாஹ்வுக்கே மெய்யான, உள்ளச்சம் கலந்த புனித வணக்கமாகவும், சிரேஷ்டமான கலப்பற்ற தண்டிப்பாகவுமே மிளிர்ந்தன. இதனை நல் மனம் படைத்த எவர் வேண்டுமாயினும் துருவி ஆராய்ந்து அறிவு பெறலாம்.

நபிபெருமான் (ஸல்) அவர்கள் தங்களின் கல்யாண குணங்கள் அனைத்திலும் பரிபூரணத்துவம் பெற்றிருந்ததால்தான் மனிதன் பயபக்தியாலும் சிரேஷ்டமான மென்மைப் பண்பாலும், ஒழுக்க சீலத்தாலுந்தான் சிரேஷ்டமாக மிளிர முடியும் என்பதைத் தீர்க்கமாயுணர்ந்து தொழுகையை அதிகமாக வற்புறுத்தினார்கள். இதை

வாயால் கூறியதுடன் நின்றுவிடாமல் தாங்களே தங்கள் நடைமுறையில் அன்றாட வாழ்க்கையில் பரிபூரணமாக அநுஷ்டித்தும் காட்டி மனித குலத்துக்கே ஒரு சிரேஷ்ட முன்மாதிரியாய் இலங்கினார்கள். இஃது மட்டுமின்றி பல சமயங்களில் நபி பெருமான் அவர்கள் இரவு முழுவதும் இரண்டே ரகஅத்துத் தொழுகையை நின்று தொழுது நிறைவேற்றியுள்ளார்கள். மற்றும் சில நேரங்களில் இரவு முழுதும் நின்று தொழுததால் அவர்களின் திருப்பாதங்கள் வீங்கியுமிருக்கின்றன. அநேகமாக அவர்கள் இரவு காலத்தில் பெரும் பகுதியைத் தொழுகையிலும் தியானத்தி (திக்ரி)லுமே கழித்துள்ளார்கள்.

"நின்று தொழுததால் அவர்களின் இரண்டு கால்களும் பல தடவை வீங்கியுமுள்ளன" என்று முகீராவும், "ஒரு சமயம் ஓர் இரவில் நபிகள் நாதருடன் நான் நின்று தஹஜ்ஜுத் தொழுதேன். அதனால் நான் சோர்ந்து களைத்துவிட்டேன். எனினும், எம்பிரான் அவர்களோ சிறிதும் சோர்வின்றி விடிய விடிய நின்று தொழுதார்கள்" என்று அப்துல்லா ஹிப்னு மஸ்ஊதும், "சில சமயங்களில் தங்களின் திருப்பாதங்களிரண்டும் சுரந்து வீங்கும்வரை நபிபெருமான் நின்று தஹஜ்ஜுத் தொழுவார்கள். அப்போதெல்லாம் ஸஹாபிகள், 'எங்கள் பெற்றோர்கள் உங்களுக்காகப் பலியாகட்டும், நாயகமே! நீங்கள்தான் பாவத்தைவிட்டு நீங்கிப் புனிதசீலராயிருக்கிறீர்களே! பின்னர் ஏன் இவ்வளவு கடுமையாக இரவு முழுதும் இபாதத்தில் மூழ்கிவிடுகிறீர்கள்?' என்று வினவுவதுண்டு. அதற்குப் பதிலாக, 'நானும்

அல்லாஹ்வின் ஓர் அடியான்தானே! அவனுக்கு நன்றி செலுத்த வேண்டாமா?' என்று நபிபெருமான் அவர்கள் பதில் கேள்வி கேட்பதுண்டு" என்று அபூ ஹுரைராவும், "தொழும்போது நபிபெருமானின் திருப்பாதங்கள் வீங்கிவிட்டால் உட்கார்ந்து கிரா அத்தை ஓதிவிட்டு, 'ருகூவு' செய்யும் சமயம் எழுந்து கிராஅத்தில் சிறிதை ஓதிவிட்டு ருகூவுச் செய் வார்கள்" என்று ஹஜரத் ஆயிஷா அன்னையாரும் கூறியுள்ளனர். வேறு ஒரு ரிவாயத்தில், "நபிகள் நாதர் தொழும்போது அல்லாஹ்வின் மீதுள்ள உள் ளச்சத்தால் பெரிய சட்டியில் வெந்நீர் கொதிக்கும் போது ஏற்படும் இறைச்சலே போன்று அவர்களின் நெஞ்சிலிருந்து ஒருவித ஓசை கேட்கும்" என்று கூறப்பட்டுள்ளது. ஆகவே, மேற்கூறிய தகவல்க ளிலெல்லாம் நபிபெருமானின் வணக்கத்தில் தண் டிப்பின் உயர்ந்த தன்மையை நாம் ஒருவாறு தெரிந்துகொள்ளுகிறோம்.

எனவே, தொழுகையின் முக்கியமான, சிரேஷ்ட மான லக்ஷியமே உள்ளச்சமும், பயபக்தியுந்தான். ஆகையால்தான் எவருடைய தொழுகையிலாவது, பிற நல்வணக்கங்களிலாவது இந்தப் புனிதத் தன்மை சம்பூரணமாக வெளியாகாமலிருந்து அதைப் பெருமானார் காண நேரிட்டுவிட்டால் உடனே அவரை அணுகி அதை இதமாக வற்புறுத்திக் கூறுவார்கள். ஒரு சமயம் ஒரு மனிதர் மிக மிக அவசரமாகத் தொழுதுகொண்டிருப்பதைக் கண்டு நபிபெருமான் அவர்கள் அந்த மனிதர் தொழுகையை முடித்ததும் அவரை அழைத்து, "நீங்கள் தொழவே இல்லை. திருப்பித் தொழுங்கள்" என்று பணித்தார்

கள். அவரும் திருப்பித் தொழுதார். இவ்வாறு அம் மனிதரை மூன்று தடவை திரும்பத் திரும்பத் தொழும்படி கூறியும் அவர் சரியாகத் தொழ வில்லை. நபி பெருமானின் கருத்தைச் சரியாகப் புரிந் கொள்ளாத அம்மனிதர், "நாயகமே, இதைவிட என்னுல் எப்படிச் சிறப்பாகத் தொழமுடியும்" என்று வினவினுர். நபிபெருமான் அவர்கள் சம்பூ ரணச் சாந்தியும், காம்பீரியமும், மன ஓர்மையும் வெளிப்படும் வகையில் 'தக்பீர்,' 'கிராஅத்' 'ருகூவ்' 'ஸுஜூது' 'நிலை' 'இருப்பு' முதலியவை களை காட்டிக் கொடுத்தார்கள்.

மேலும், நபிபெருமானின் தொழுகையில் மெய் யான உள்ளச்சமும், புனிதமான பக்திப் பெருக்கும், சிரேஷ்டமான மன ஓர்மையும், இறைவனேடு கொண்டுவிடும் மகத்தான பிணைப்பும் சம்பூரண மாக வெளிப்படும். அவர்கள் தொழுகையில் மூழ்கியிருக்கும்போது அவர்களைப் பார்ப்பவர்கள் உயிரும், உணர்ச்சியும் இல்லாத ஒரு சிலையாக அவர்கள் மாறிவிட்டார்களோ என்றுகூட ஐயப் பாடு கொண்டுவிடும் அளவுக்கு ரக்ஷகனேடு ஒன்றித்துவிடுவார்கள்.

சில சமயம் தொழுகை, நல்வணக்கம் முதலிய வைகளை இலகுவான முறையில் அனுஷ்டிக்கும்படி மற்றவர்களை ஏவி, " இஸ்லாம் என்ற சன்மார்க்கம் அநுஷ்டிக்க இலகுவானது " என்றும் கூறுவார் கள். ஒரு சமயம் நபி பெருமானிடம் ஒரு பெண் மணி வந்து, "நாயகமே, நான் தூங்காமல் இரவு நல்வணக்கத்தில் மூழ்கிவிடுகிறேன்" என்று

கூறியதற்கு, "போதும் போதும், நீ எப்போதும் செய்யச் சக்தியுள்ள அளவுக்கு நல்வணக்கங்களைச் செய்தால் போதும். ஏனென்றால், நீதான் வணக்கம்புரிவதில் எப்போதாவது களைத்துச் சோர்ந்துவிடுவாய். அல்லா(ஹ்)வோ 'தவாபு' (நற்கூலி) கொடுப்பதில் ஒருபோதும் சலித்துவிடமாட்டான்; இதை அந்த அல்லாஹ்வின்மீது ஆணையிட்டே கூறுகிறேன்" என்று திருவுளமானார்கள்.

அல்லா(ஹ்)வால் ஏவப்பட்டுள்ள பர்லான (கடமை) இபாதத்துக்களைச் சம்பூரணமாக நிறைவேற்றுவதுடனில்லாது தங்களின் புனிதமான மூச்சு முழுவதையும் 'நபிலா'ன நல்வணக்கங்களிலும், இறைவன் திருநாமத்தை 'திக்று'ச் செய்வதிலும் செலவிடுவார்கள். அவர்கள் செய்துகொண்டிருக்கும் சர்வ கருமங்களிலும் இறைவன்மீது உள்ளச்சமும், பக்தியும் தானே சிரேஷ்டமாக பொலிந்து கொண்டிருக்கும். வாயளவில் பிறருக்கு உபதேசித்துவிடுவது சுலபம். ஆனால், சொல்பவர்களே அநுஷ்டித்துக் காட்டவேண்டும். ஏனெனில், அதில்தான் சர்வ சோதனையும் அடங்கியுள்ளது. உலகில் இதுவரையும் தோன்றி சன்மார்க்கப் பணியாற்றியுள்ள மார்க்க வழிகாட்டிகளிலும் சரி, சமூகச் சீர்திருத்தச் சீலர்களிலும் சரி எவரும் நபிபிரான் அவர்களைப் போன்று இச்சிரேஷ்டப் பண்பில் இன்றுவரை நிறைவுபெற்றிருக்கவில்லை என்று நிச்சயம் நாம் அறுதியிட்டு உறுதி கூறிவிடலாம்.

இந்த மாபெரும் மகானவர்கள் தங்களின் புனித ஜீவியத்தில் முழு மூச்சிலும் அனுஷ்டித்துவந்த

காரியங்கள் அனைத்திலும் தனது ரக்ஷகனை இதயத்துள் பக்தியுடனிருத்திச் செயல்புரிந்த அளவுக்கு, அவனது நினைப்பை முன்னிறுத்தி வணக்கத்தில்ஈடு பட்ட அளவுக்கு வேறு எந்த மனிதரும் செயல்புரியவில்லை என்றே ஐயமறக் கூறி முடித்துவிடலாம். சுருங்கக் கூறுமிடத்து நமது சர்வலோக ரக்ஷகர் முஹம்மது (ஸல்) அவர்களின் சர்வ காரியங்களும், அவர்களின் நடை, இருப்பு, தூக்கம், விழிப்பு, எழுந்திருத்தல், உட்காருதல், உண்ணுதல், குடித்தல் அனைத்துமே புனித இபாதத்தாகவே நிகழ்ந்தன. அவர்களின் வாழ்வு முழுதுமே புனித வணங்கங்களில் சிரேஷ்டமாகவே கழிந்தது.

இறைவா, எம்பிரான் (ஸல்) அவர்களின் கல்யாண குணங்கள் அனைத்தாலும் நாங்கள் அறிவு பெற்றுப் புனிதமடைய அருள்புரி! ஆத்மஞான அமுதை அள்ளிப் பருக வேட்கை மிகக்கொண்டு ஏங்கி நிற்கும் எங்கள் அண்டை, அயல் சமூகத்தவரும் சத்திய இஸ்லாத்தின் புனிதப் பண்பின், எம்பிரானவர்களின் சிரேஷ்ட குணங்களின் அழியா சின்னங்களின் முன்மாதிரியைப் பார்த்து சத்திய இஸ்லாத்தின் வற்ருத அமுத ஊற்றுல் வளம் பெற்று, செழிப்புற்று மோக்ஷமடையவும் உன் கிருபாகடாக்ஷத்தை அனுக்கிரஹித்தருள்! ஆமீன்.

---




اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مَنْ مِنْهُ انْشَقَّتِ الْاَسْرَارُ
وَانْفَلَقَتِ الْاَنْوَارُ وَفِيهِ ارْتَقَتِ الْحَقَائِقُ
وَتَنَزَّلَتْ عُلُومُ اٰدَمَ فَاَعْجَزَ الْخَلَائِقَ وَلَهُ
تَضَاءَلَتِ الْفُهُومُ فَلَمْ يُدْرِكْهُ مِنَّا سَابِقٌ
وَلَا لَاحِقٌ فَرِيَاضُ الْمَلَكُوتِ بِزَهْرِ جَمَالِهِ
مُونِقَةٌ وَحِيَاضُ الْجَبَرُوتِ بِفَيْضِ اَنْوَارِهِ
مُتَدَفِّقَةٌ وَلَا شَيْءَ اِلَّا وَهُوَ بِهِ مَنُوطٌ اِذْ لَوْ
لَا الْوَاسِطَةُ لَذَهَبَ كَمَا قِيلَ الْمَوْسُوطُ صَلَاةً
تَلِيقُ بِكَ مِنْكَ اِلَيْهِ كَمَا هُوَ اَهْلُهُ - اَللّٰهُمَّ اِنَّهُ

سِرُّكَ الْجَامِعُ الدَّآلُّ عَلَيْكَ وَحِجَابُكَ الْاَعْظَمُ
الْقَائِمُ لَكَ بَيْنَ يَدَيْكَ ـ اَللّٰهُمَّ اَلْحِقْنِي بِنَسَبِهٖ
وَحَقِّقْنِي بِحَسَبِهٖ وَعَرِّفْنِي اِيَّاهُ مَعْرِفَةً اَسْلَمُ
بِهَا مِنْ مَوَارِدِ الْجَهْلِ وَاَكْرَعُ بِهَا مِنْ مَوَارِدِ
الْفَضْلِ وَاحْمِلْنِي عَلٰى سَبِيْلِهٖ اِلٰى حَضْرَتِكَ حَمْلًا
مَحْفُوْفًا بِنُصْرَتِكَ وَاقْذِفْ بِيْ عَلَى الْبَاطِلِ
فَاَدْمَغَهُ وَزُجَّ بِيْ فِيْ بِحَارِ الْاَحَدِيَّةِ وَانْشُلْنِيْ
مِنْ اَوْحَالِ التَّوْحِيْدِ وَاَغْرِقْنِيْ فِيْ عَيْنِ بَحْرِ
الْوَحْدَةِ حَتّٰى لَا اَرٰى وَلَا اَسْمَعَ وَلَا اَجِدَ
وَلَا اُحِسَّ اِلَّا بِهَا وَاجْعَلِ الْحِجَابَ الْاَعْظَمَ
حَيَاةَ رُوْحِيْ وَرُوْحَهُ سِرَّ حَقِيْقَتِيْ وَحَقِيْقَتَهُ
جَامِعَ عَوَالِمِيْ بِتَحْقِيْقِ الْحَقِّ الْاَوَّلِ يَا اَوَّلُ يَا
اٰخِرُ يَا ظَاهِرُ يَا بَاطِنُ اسْمَعْ نِدَائِيْ بِمَا سَمِعْتَ
بِهٖ نِدَآءَ عَبْدِكَ زَكَرِيَّاءَ وَانْصُرْنِيْ بِكَ لَكَ

وَأَيِّدْنِي بِكَ لَكَ وَاجْمَعْ بَيْنِي وَبَيْنَكَ وَحُلْ
بَيْنِي وَبَيْنَ غَيْرِكَ ثلثا اَللّٰهُ اَللّٰهُ اَللّٰهُ۔
إِنَّ الَّذِى فَرَضَ عَلَيْكَ الْقُرْاٰنَ لَرَآدُّكَ
إِلٰى مَعَادٍ۔ رَبَّنَا اٰتِنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً وَّهَيِّئْ
لَنَا مِنْ اَمْرِنَا رَشَدًا ثلثا إِنَّ اللّٰهَ وَمَلٰٓئِكَتَهُ
يُصَلُّوْنَ عَلَى النَّبِيِّ يَآ اَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا
عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا۔ صَلَوَاتُ اللّٰهِ وَسَلَامُهُ
وَتَحِيَّاتُهُ وَرَحْمَتُهُ وَبَرَكَاتُهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ
عَبْدِكَ وَنَبِيِّكَ وَرَسُوْلِكَ النَّبِيِّ الْاُمِّيِّ وَعَلٰى
اٰلِهٖ وَصَحْبِهٖ عَدَدَ الشَّفْعِ وَالْوَتْرِ وَعَدَدَ كَلِمَاتِ
رَبِّنَا التَّامَّاتِ الْمُبَارَكَاتِ۔ سُبْحَانَ رَبِّكَ
رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ۔ وَسَلَامٌ
عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

### சலவாத்த இப்ன பஷீஷின் தர்ஜுமா

இறைவா, எந்தப் பரிசுத்தமான திருநபியிட மிருந்து மெஞ்ஞான அகமியங்கள் புறப்பட்ட னவோ,

எவர்களிடமிருந்து ஒளிக்கதிர்கள் வெளியா கின்றனவோ, சத்திய ஜோதி உயர்கிறதோ,

யாருடைய ஜோதி ஆதமின் ஆத்ம ரகஸியங் கள் துலக்கமாகவும், அவர்கள், சிருஷ்டிகள் அனைத் தையும் புறத்தே தள்ளிவிட்டு முன்னே சென்று அமரவும் உதவியதோ,

எவர்கள் அமர்ந்துவிட்ட 'மகாமை' முன்னோர் களாலும், பின்னோர்களாலும், அவர்களின் ஞானங் களாலுங்கூட அறிந்துகொள்ள முடியாதோ,

எவர்களின் எழிலின் மகத்துவத்தால் ஆலம் மலகூத்தின் (அமர லோகத்தின்) பூங்கா ஜொலிக் கிறதோ,

எவர்களின் பாக்கியத்தால் ஆலம் ஜபரூத்தின் ஊற்றுக் கண் பொங்கி வழிகிறதோ,

அவர்களின் (எம்பெருமான்(ஸல்) அவர்களின்) மூலமாகத்தான் சர்வ சிருஷ்டிகளும் தொடர்பு கொண்டு நிற்கின்றன. ஊன்றுமிடமில்லாவிடின் ஊன்ற முடியாததுபோல, நாங்கள் ஊன்றி நிற்கும் தலமாய் அமைந்த திருநபியின்மீது உன் அருளை (ஸலவாத்தை)ப் பொழிவாயாக!

இறைவா, உன் மாண்புக்குத் தக்கவாறான ஸலவாத்தை அவர்கள்மீது வருஷிப்பாயாக!

ரக்ஷகா, நிச்சயமாக அவர்களே உனது அகமியங்கள் அனைத்தையும் தாங்கி நின்று சிருஷ்டி கள் உன்னை அறிந்துகொள்ளக் கைகாட்டியாயுள் ளவர்கள். மேலும், உனக்காக உன் திருச் சந்நிதி யில் சிறப்பாகத் தொங்கா நிற்கும் புனிதத் திரையும் அவர்களேதாம். இறைவா, அந்தத் திருநபியவர் களின் மகத்துவத்தாலும், மாண்பாலும் என்னைப் பிணைத்து உறுதிப்படுத்துவாயாக! எனது அஞ்ஞா னங்களைத் தவிர்த்துப்புனிதப்படும் வகையான மெஞ் ஞானங்களையும், உனது சௌபாக்கியங்களின். ஊற் றுல் செழித்து வளர அருளையும் வருஷிப்பாயாக! உனது திருச் சந்நிதிவரை சத்திய வழியைக் காட்டு வாயாக ! உனது ஏகத்துவ சமுத்திரத்தில் மெய்யா காவே என்னை நீந்தச்செய்வாயாக !

என்னை ஏகத்துவ ஏரியில் மூழ்கடித்துவிடு! அதனுல் நான் பார்ப்பதனைத்தும், கேட்பதனைத்தும், எனக்கு அருளப்படுபவையனைத்தும், எனது உணர் வனைத்தும் ஏகத்துவ ஏகத்துவமாகவே சமைந்துவிட அனுக்கிரஹிப்பாயாக!

இறைவா, மெஞ்ஞான அகமியத் திரையைக் கொண்டே எனது ஆத்மாவை இயங்கச் செய்! மெஞ்ஞானமென்ற புனித அகமியத் திரையையே எனது உள்ளமையாகவும் ஆக்கி அருள்புரி! மேலும், அத்திரையையே சத்தியமாக நான் வேண் டுகிறேன் என்ற முறையில் அதையே எனது சர்வ லோகமாகவும் கடாக்ஷித்துவிடு!

ஹே, ஆதிக்கும் ஆதியானவனே, அந்தமுமான வனே, உள்ளும் வெளியுமானவனே, உனது புனித

அடியார் ஜக்ரிய்யா (அலை) அவர்களின் பிரார்த்தனையை ஏற்றதுபோல எனது பிரார்த்தனையையும் ஏற்பாயாக! உனது உள்ளமைக்கே (தாத்து) சொந்தமாயுள்ள அந்தப் புனித சகாயத்தை அருளி அதை உன் புனிதப் பாதையிலேயே, உனக்காகவே அற்பணிக்கவும் அருள்புரிவாயாக!

நீ அல்லாத மற்றச் சிருஷ்டிகளுடன் நான் பிணைந்துகொள்ளாமல் எனக்கும் அவைகளுக்குமிடையில் திரையாக நின்று என்னைத் தடுத்து ரக்ஷிப்பாயாக! அல்லாஹ், அல்லாஹ், அல்லாஹ்!

"நிச்சயமாக, திரு குர்ஆனை உம்மீது இறக்கியவன் (அல்லாஹ்) உம்மை மீண்டும் தரிப்படும் தலத்தில் மீளவைப்பான்."

"எங்கள் ரக்ஷகா, உன் புறத்தால் எங்களுக்கு அருள்மாரியை வருஷிப்பாயாக! மேலும், எங்களுக்கு எங்கள் காரியங்களில் வெற்றியையும், புனிதத்தையும் அனுக்கிரஹிப்பாயாக!" (இதை மூன்று தடவை கூறவும்.)

"நிச்சயமாக அல்லா(ஹ்)வும், அவனது மலக்கு (அமரர்)களும் நபிபெருமான் அவர்கள் மீது சலவாத்து(அருள்மாரியை)ப் பொழிகின்றனர். மெய்விசுவாசிகளே, நீங்களும் அவர்கள் மீது சலவாத்தையும் சலாமையும் கூறுவீர்களாக!" இறைவனின் அருளும் (சலவாத்தும்), சாந்தியும் (சலாமும்), சம்மானமும் (தஹிய்யத்), பரக்கத்து (புனிதத்துவமு)ம் உனது அடியாரும், நபியும், தூதருமான முஹம்மது நபி (ஸல்) அவர்கள்மீதும், அவர்களின் உறவி

னர், தோழர்கள்மீதும் இரட்டையாகவும், ஒற்றை யாகவும் எங்கள் ரக்ஷகனுன உனது சம்பூரணமான புனிதமான கலிமாக்களின் (திருவாசகம்) அளவுக்கு உண்டாவதாக! சுப்ஹான ரப்பிக ரப்பில் இஜ்ஜத்தி, அம்மா, யஸிபூன், வ ஸலாமுன், அலல் முர்ஸலீன வல் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

---




اَللّٰهُمَّ اشْرَحْ بِالصَّلٰوةِ عَلَيْهِ
صُدُوْرَنَا وَيَسِّرْ بِهَا اُمُوْرَنَا وَفَرِّجْ
بِهَا هُمُوْمَنَا وَاكْشِفْ بِهَا غُمُوْمَنَا
وَاغْفِرْ بِهَا ذُنُوْبَنَا وَاقْضِ بِهَا
دُيُوْنَنَا وَاَصْلِحْ بِهَا اَحْوَالَنَا وَبَلِّغْ
بِهَا اٰمَالَنَا وَتَقَبَّلْ بِهَا تَوْبَتَنَا وَ
اغْسِلْ بِهَا حَوْبَتَنَا وَانْصُرْ بِهَا حُجَّتَنَا
وَطَهِّرْ بِهَا اَلْسِنَتَنَا وَاٰنِسْ بِهَا
وَحْشَتَنَا وَارْحَمْ بِهَا غُرْبَتَنَا وَاجْعَلْهَا

نُوْرًا بَيْنَ اَيْدِيْنَا وَمِنْ خَلْفِنَا وَعَنْ اَيْمَانِنَا
وَعَنْ شَمَائِلِنَا وَمِنْ فَوْقِنَا وَمِنْ تَحْتِنَا وَفِي حَيَاتِنَا
وَمَوْتِنَا وَفِي قُبُوْرِنَا وَحَشْرِنَا وَنَشْرِنَا وَظِلًّا يَوْمَ
الْقِيٰمَةِ عَلٰى رُؤُسِنَا وَثَقِّلْ بِهَا يَارَبِّ مَوَازِيْنَ
حَسَنَاتِنَا وَاَدِمْ بَرَكَاتِهَا عَلَيْنَا حَتّٰى نَلْقٰى نَبِيَّنَا
وَسَيِّدَنَا مُحَمَّدًا صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَنَحْنُ اٰمِنُوْنَ مُطْمَئِنُّوْنَ
فَرِحُوْنَ مُسْتَبْشِرُوْنَ وَلَا تُفَرِّقْ بَيْنَنَا وَبَيْنَهُ
حَتّٰى تُدْخِلَنَا مُدْخَلَهُ وَتُؤْوِيَنَا اِلٰى جِوَارِهِ الْكَرِيْمِ
مَعَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ مِنَ النَّبِيِّيْنَ وَالصِّدِّيْقِيْنَ
وَالشُّهَدَاءِ وَالصَّالِحِيْنَ وَحَسُنَ اُولٰئِكَ
رَفِيْقًا اَللّٰهُمَّ اِنَّا اٰمَنَّا بِهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَلَمْ نَرَهُ
فَمَتِّعْنَا اَللّٰهُمَّ فِي الدَّارَيْنِ بِرُؤْيَتِهِ وَثَبِّتْنَا
عَلٰى مَحَبَّتِهِ وَاسْتَعْمِلْنَا عَلٰى سُنَّتِهِ وَتَوَفَّنَا
عَلٰى مِلَّتِهِ وَاحْشُرْنَا فِي زُمْرَتِهِ النَّاجِيَةِ

وَحِزْبِهِ الْمُفْلِحِينَ وَانْفَعْنَا بِمَا انْطَوَتْ
عَلَيْهِ قُلُوبُنَا مِنْ مَحَبَّتِهِ ﷺ يَوْمَ لَا جِدَّ وَلَا
مَالَ وَلَا بَنِينَ وَاَوْرِدْنَا حَوْضَهُ الْاَصْفَى وَ
اَسْقِنَا بِكَأْسِهِ الْاَوْفَى وَيَسِّرْ عَلَيْنَا زِيَارَةَ حَرَمِكَ
وَحَرَمِهِ مِنْ قَبْلِ اَنْ تُمِيتَنَا وَاَدِمْ عَلَيْنَا الْاِقَامَةَ
بِحَرَمِكَ وَحَرَمِهِ ﷺ اِلَى اَنْ نُتَوَفَّى اَللّٰهُمَّ
اِنَّا نَسْتَشْفِعُ بِهِ اِلَيْكَ اِذْ هُوَ اَوْجَهُ الشُّفَعَاءِ
اِلَيْكَ وَنُقْسِمُ بِهِ عَلَيْكَ اِذْ هُوَ اَعْظَمُ مَنْ اُقْسِمَ
بِحَقِّهِ عَلَيْكَ وَنَتَوَسَّلُ بِهِ اِلَيْكَ اِذْ هُوَ اَقْرَبُ
الْوَسَائِلِ اِلَيْكَ نَشْكُوْا اِلَيْكَ يَا رَبِّ قَسْوَةَ
قُلُوبِنَا وَكَثْرَةَ ذُنُوبِنَا وَطُوْلَ اٰمَالِنَا وَفَسَادَ
اَعْمَالِنَا وَتَكَاسُلَنَا عَنِ الطَّاعَاتِ وَهُجُومَنَا عَلَى
الْمُخَالَفَاتِ فَنِعْمَ الْمُشْتَكَى اِلَيْهِ اَنْتَ يَا رَبِّ
بِكَ نَسْتَنْصِرُ عَلَى اَعْدَآئِنَا وَاَنْفُسِنَا فَانْصُرْنَا

وَعَلَى فَضْلِكَ نَتَوَكَّلُ فِي صَلَاحِنَا فَلَا تَكِلْنَا إِلَى
غَيْرِكَ يَا رَبَّنَا وَإِلَى جَنَابِ رَسُولِكَ ﷺ نَنْتَسِبُ
فَلَا تُبْعِدْنَا وَبِبَابِكَ نَقِفُ فَلَا تَطْرُدْنَا وَإِيَّاكَ
نَسْأَلُ فَلَا تُخَيِّبْنَا اللّٰهُمَّ ارْحَمْ تَضَرُّعَنَا وَآمِنْ
خَوْفَنَا وَتَقَبَّلْ أَعْمَالَنَا وَأَصْلِحْ أَحْوَالَنَا وَاجْعَلْ
بِطَاعَتِكَ اشْتِغَالَنَا وَإِلَى الْخَيْرِ مَآلَنَا وَحَقِّقْ
بِالزِّيَادَةِ آمَالَنَا وَاخْتِمْ بِالسَّعَادَةِ آجَالَنَا.
هٰذَا ذُلُّنَا ظَاهِرٌ بَيْنَ يَدَيْكَ وَحَالُنَا لَا يَخْفَى
عَلَيْكَ أَمَرْتَنَا فَتَرَكْنَا وَنَهَيْتَنَا فَارْتَكَبْنَا وَلَا
يَسَعُنَا إِلَّا عَفْوُكَ فَاعْفُ عَنَّا يَا خَيْرَ مَأْمُولٍ
وَأَكْرَمَ مَسْئُولٍ إِنَّكَ عَفُوٌّ كَرِيمٌ رَؤُفٌ رَحِيمٌ
يَا أَرْحَمَ الرَّاحِمِينَ وَصَلَّى اللّٰهُ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ
وَعَلَى آلِهِ وَصَحْبِهِ وَسَلَّمَ تَسْلِيمًا
• وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ

## துஆவின் தர்ஜுமா

ரக்ஷகா, நபிபெருமான் (ஸல்) அவர்கள்மீது நாங்கள் ஓதும் ஸலவாத்தின் பொருட்டால் எங்கள் இதயங்களை விரிவாக்குவாயாக! அதன் பாக்கியத்தால் எங்களின் சர்வ காரியங்களையும் சித்திபெறச் செய்வாயாக! அதன் பொருட்டால் எங்கள் இடுக்கண்களை நீக்குவாயாக ! அதன் மகிமையால் எங்கள் சஞ்சலங்களைப் போக்குவாயாக ! அதன் பெருமையால் எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! அதன் மாண்பால் எங்கள் கடன்களை அடைக்க அருள்புரிவாயாக ! அதன் புண்ணியத்தால் சீர்கெட்ட எங்கள் கருமங்களை நேர்செய்வாயாக ! அதன் காரணத்தால் எங்கள் சர்வ அபிலாஷைகளிலும் ஜெயத்தைக் கடாட்சிப்பாயாக ! அதன் மகிமையால் எங்கள் 'தௌபா'வை ஏற்று எங்களின் ஆத்ம களங்கங்களை போக்கித் தூய்மைப்படுத்துவாயாக ! அதன் பாக்கியத்தால் உன்மீது எங்களின் பக்தியை நிலை நிறுத்த சகாயம்புரிவாயாக! அதன் பொருட்டால் எங்கள் நாவுகளைத் தூய்மைப்படுத்தி, எங்களின் மிரட்சியைப் போக்கி உன்னுடன் ஒன்றித்திருக்க அருள்புரிவாயாக ! எங்களின் ஏழ்மைக்கு இறங்கித் தயைபுரி. இந்த சலவாத்தை எங்களுக்கும் எங்கள் முன் புறத்துக்கும், பின் புறத்துக்கும், வல, இடப் புறங்களுக்கும், எங்கள் மேல் - கீழுக்கும், எங்கள் வாழ்வுக்கும், எங்கள் மரணத்துக்கும், எங்கள் கபுருக்கும், எங்களை எழுப்பும்போதும் ஒளிதரும் தீபமாக ஆக்கியருள்! இறுதி நாளில் (கியாமத்தில்)

எங்கள் தலைக்குமேல் அதை நிலழலாகவும் ஆக்கி அருள்புரிவாயாக !

இறைவா, எங்களின் நன்மையின் எடையைக் கனமாக்கு! எங்கள் நபிகள் நாதரை நாங்கள் சந்தித்துப் புனிதம் பெறும்வரை, நாங்கள் மெய்யாக விஸ்வாசித்துச் 'சாந்தி' என்ற நன்மாராயத்தால் திருப்திப்படும்வரை அதன் பாக்கியத்தை என்றென்றைக்கும் நீடித்திருக்கச் செய்! எங்கள் நபிகள் நாதர் (ஸல்) அவர்கள் நுழைந்துவிட்ட திருவாசலில் நாங்களும் நுழையும்வரை எங்களையும், அவர்களையும் விலக்கி வைத்துவிடாதே! மேலும், அவர்களின் மகத்துவமிக்க அருகில் அமர்ந்துவிட்ட புனித நேசர்களான நபிமார்கள், சித்தீகீன் (மெய்யன்பர்)கள், ஷுஹதாக்கள் (புனித போரில் மரித்த மாவீரர்கள்), புனித மஹான்களின் ஸ்தானத்தில் எங்களையும் அமரச்செய்வாயாக !

ரக்ஷகா, நாங்கள் எங்களின் திருநபியைத் தரிசிக்கும் பாக்கியம் பெருதவர்களாயினும், அவர்களை நேசித்து ஈமான் (விஸ்வாசம்) கொண்டோம். இறைவா, ஈருலகிலும் அவர்களின் தரிசன பாக்கியத்தை கடாக்ஷிப்பதன் மூலம் எங்களைப் பூரிக்கச் செய்வாயாக! அவர்களின் நேசத்துக்காகவே எங்களை வாழச்செய் ! அவர்களின் சுன்னத்தான புனிதப் பாதையிலேயே எங்களை நடத்திவை ! அவர்களின் சன்மார்க்கத்தின்மீதே எங்களை மரணிக்கச் செய்! ஈடேற்றம் பெற்ற ஜெயசீலர்களான புனித அடியார்களின் திருக்கூட்டத்தில் சேர்ந்தவர்களாக எங்களை எழுப்பியருள் !

அவர்களின்மீது எங்களின் இதயங்கள் கொண்டிருக்கும் உள்ளன்பின் பாக்கியத்தால் உற்ருரும், சுற்றமும், சௌபாக்கியங்களும் உதவ முடியாத அந்த நாளில் (கியாமத்தில்) நாங்கள் பயனடைய அருள்புரி! அவர்களின் புனிதமிக்க ஹௌளுல் கௌதருக்கு நாங்களும் வந்து அவர்களால் நிரப்பி வழங்கப்படும் அமுதபானத்தை அருந்தும் வரத்தைத் தந்தருள்! நாங்கள் மரணிக்கும் முன்பே உன்னுடையவும், உன் நபிகள் நாதருடையவும் சந்நிதர்னத்தைத் தரிசிக்கக் கடாக்ஷித்து, நாங்கள் மரணிக்கும் வரை அதிலேயே சதாவும் இன்புற்றிக்க அநுக்கிரஹித்தருள்!

ரக்ஷகா, நபிபெருமானின் துவாராவாகவே உன்னிடம் மன்ருடிப் பிராத்திக்கிருேம். அவர்களே மன்ருடுபவர்களில் உன்னிடம் மிகவும் நெருங்கியவர்கள். அவர்களின் துவாராவாகவே உன்னிடம் அறுதியிட்டு உறுதி கூறுகிருேம். ஏனெனில், அவர்களே உன்னிடம் சத்தியமிட்டுக் கூற மிகவும் அருகதை பெற்றவர்களாவார்கள். உன்னை நெருங்க அவர்களைக்கொண்டே ஊன்றுதல் கொள்கிருேம். அவர்களே உன்னிடம் நெருங்குவதற்கு மிகவும் தகுதி பெற்றவர்கள்.

ரக்ஷகா, எங்கள் உள்ளத்தின் களங்கங்களையும், இதய அழுக்குகளையும், மகத்தான பாவங்களையும், தோஷம் மிகுந்த எங்கள் செயல்களையும், விரிந்த எங்களின் பேராசைகளையும், நல்வணக்கம் செய்யாமலிருக்கும் எங்கள் பொடுபோக்குத்தனத்தையும், உனக்கு மாறுசெய்வதில் நாங்கள் கொண்டிருக்கும் துணிச்சலையும் மெய்யாக

விண்ணப்பித்து உன்னிடமே இறைஞ்சுகிறோம். அல்லா(ஹ்)வே, நீயே முறையீடுகளைக் கேட்க அருகதையுள்ளவன். எங்கள் ஆத்மாவையும், வெளிப் பகைகளையும் நாங்கள் வெற்றிக்கொள்ள உன் புனித சகாயத்தை வேண்டுகிறோம். ஜெயத்தை அநுக்கிரஹிப்பாயாக! எங்கள் சீருக்கும், சிறப்புக்கும் மற்றவர்களை ஒதுக்கி, உனது நல்லருள்மீதே நம்பிக்கை கொண்டுள்ளோம்.

எங்கள் ரக்ஷகா, உனது திருத் தூதர் (நபிகள் நாதர் ஸல்) அவர்களின் திருச் சந்நிதியை அடையவே ஆசிக்கிறோம்; (அந்தப் பாக்கியம் எங்களுக்குக் கிட்டாமல்) எங்களை விலக்கிவிடாதே! உனது திருவாசலில் நின்றே இறைஞ்சுகிறோம்; எங்களை விரட்டிவிடாதே! உன்னிடமே கெஞ்சிப் பிரார்த்திக்கிறோம்; அருள்புரியாமல் வெறுங் கையுடன் எங்களைத் திருப்பிவிடாதே!

ரக்ஷகா, எங்கள் திடுக்கத்தையும் அச்சத்தையும் அகற்றி சாந்தியளித்து அருள்புரி! எங்கள் நல் அமல்களை ஏற்று, தோஷமான செயல்களைச் சீர்படுத்திவிடு! உனது ஏவல்களுக்குச் சிரேஷ்டமாக பணிந்து நடப்பவர்களாக எங்களைச் சமைத்துவிடு! நாங்கள் நல்லதையே நாட வரம் தந்தருள்! எங்களின் தவணையை (மரணத்தை) உனது அருளுடையதாக்கு! எங்களின் இழிவான குணங்களும், தீய நடத்தைகளும், உன் முன்பு மறைந்தவையாயில்லை. நீ ஏவியதைச் செய்யாது விட்டோம்; நீ விலக்கியதைத் துணிச்சலாகச் செய்தும்விட்டோம். ஆகவே, உனது விசாலமான மன்னிப்பைத் தவிர எங்களுக்கு வேறு புகலிடமில்லை.

பிரார்த்திக்கப்பட அருகதையுடையவனே, கேட்கப்படத் தகுதிபடைத்தோனே, அருளாளனே, எங்களை மன்னித்தருள்! நீயே மன்னிப்பவனுயும், சங்கையானவனுயும், அருளாளனுயும், அன்புடையோனுயும் இருக்கிருய். (ஸல்லல்லாஹு அலா சைய்யிதினு முஹம்மதின் வ அலா-ஆலிஹி-வ ஸஹ்பிஹி-வஸல்லம-தஸ்லீமன்-வல் ஹம்து லில்லாஹி-ரப்பில் ஆலமீன்).

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

முர்ஷித்
9, மேட்டுத் தெரு,
சிதம்பரம். (S. India)

—

ஆர். பி. எம். கனி பி. ஏ., பி. எல்.,
128, மூர் தெரு,
சென்னை-1.

—

முஹம்மத் ஹுசேன்
16, ஆடிய பாதம் தெரு,
சென்னை-1.

—

டி. என். அப்துர் ரஹீம் சாஹிப்
(மலாயன் ஷிப் சாண்டலர்ஸ்)
21, பேட்டரி ரோடு, (இரண்டாம் மாடி)
சிங்கப்பூர்-1.

